







**சாந்தி வெளியீடு**
11, பரவக்காரத் தெரு
**நாகை - 610 001**

Rs 9 - P 00

**கிடைக்குமிடங்கள் :**

1. **தமிழ் நூலகம்**
   10-இ, பீமண்ண முதலி தோட்டத் தெரு
   ஆழ்வார்பேட்டை, சென்னை 600 018
2. **மீனாட்சி புத்தக நிலையம்**
   60, மேலக் கோபுர வீதி
   மதுரை 625 001
3. **பாரி நிலையம்**
   59, பிராட்வே, சென்னை 600 001
4. **சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**
   1/140 பிராட்வே, சென்னை 600 001

**திப்புரவு அச்சகம்**
**சென்னை 600 018**

# சிறப்புரை

தாமரைச்செல்வர், கல்வித் தந்தை

**நெ.து. சுந்தரவடிவேலு**

'பாம்பென்ருல் படையும் நடுங்கும்.' அத்தகைய அச்சம், பாம்பின் மேல் நாம் கொண்டுள்ள வெறுப்பிற்குக் காரணம்.

பாம்பும் மனிதனும் மிகத் தொன்மையுடைய உயிர்கள். மிகக் காட்டுக் காலத்தில் தோன்றிய அச்ச உணர்வு இன்றும் தொடர்கிறது. அதற்குக் காரணம் அறியாமை. உலகிலுள்ள பலவற்றையும் துருவித்துருவி ஆராய்ந்தவர்கள் உள்ளார்கள். பாம்பு இனத்தைப்பற்றி ஆய்ந்தவர்கள் சிலரே. அச்சிலரிலே ஒருவர், திரு ஆ. சு. இராமலிங்கம் ஆவார்.

தமிழ் நாட்டின் நெற்களஞ்சியமாகிய தஞ்சை மாவட்டத்தில் பிறந்த நண்பர் இராமலிங்கம், கிணற்றுத் தவளையாக இல்லை. தென்கிழக்கே உள்ள சிங்கப்பூரில் சில ஆண்டுகள் வாழ்ந்தார். இப்போது மேற்கே இலண்டனில் குடியிருக்கிருர்.

அவர் சிங்கப்பூரில் அலுவல் பார்த்த போது, பாம்பு ஆராய்ச்சியில் தலைப்பட்டார். பாம்பை வளர்க்கும் பொழுதுபோக்கிலும் ஈடுபட்டார். அறியாமை அகல அகல, அச்சம் விலகி விலகிச் சென்றது, உண்மை புலனாயிற்று.

பாம்பு வகைகளில் எல்லாவகைப் பாம்புகளும் நஞ்சுடையன அல்ல. நஞ்சில்லாத பாம்பு வகைகளும் எண்ணற்றன. தற்காப்பிற்காகவே, நஞ்சுடைய பாம்பும் பிறரைக் கடிக்கிறது. பாம்பின் நஞ்சு நரம்பு மண்டலத்தைப் பாதித்துக் கொல்வதுண்டு; இரத்த மண்டலத்தைத் தாக்கிக் கொல்வதும் உண்டு. இச்செய்திகளை அனுபவ வாயிலாக உணர்ந்தார்.

பாம்பு உலகத்தைப்பற்றியும் பாம்புகளின் வியத்தகு குண இயல்புகள் பற்றியும் பாம்புகளைக் கடவுள்களாக வணங்கும் பழக்கம் பற்றியும் கட்டுரைகள் எழுதினர்.

பாம்பு வகைகளில், சில குறிப்பிடத்தக்க வகைகளைப் பற்றி விவரமாக எழுதியுள்ளார். 'பாம்பு கடித்தால்' என்ற தலைப்பில், முதல் உதவிக் குறிப்புகளை எழுதியுள்ளார். தமிழ் நாட்டில் பொது மக்களிடம் உலவிவரும் வைத்திய முறைகளைச் சுட்டிக் காட்டியுள்ளார். அவற்றைப் பற்றி, தீரவிசாரித்து, ஆய்ந்து, விரிவாக, பிற்காலத்தில், எழுதுவாரென்று எதிர்பார்க்கலாம்.

பாம்பு பற்றி எழுதிய இருபது கட்டுரைகளைத் தொகுத்து, 'பாம்பும் மனிதனும்' என்னும் தலைப்பில் நூலாக வெளியிடுவது வரவேற்கத் தக்கது. இந்நூலில் உள்ள கட்டுரைகள் எளிய, ஆற்றொழுக்கான நடையில் அமைந்துள்ளன. நூலைக் கையில் எடுத்தால், முழுவதையும் படித்துமுடித்த பிறகே, கீழே வைக்கத் தோன்றுகிறது. தகவல்கள், சுவைபடச் சொல்லப்பட்டுள்ளன. சொந்த வாழ்க்கையில் கண்ட சில நிகழ்ச்சிகளையும் விவரித்துள்ளது நன்றாக இருக்கிறது. இங்கும் அங்கும் தமிழ் நாட்டுப் பழமொழிகளைக் கலந்திருப்பது சிறப்பாயிருக்கிறது.

'சென்றிடுவீர் எட்டுத்திக்கும்; கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்' என்று தேசியகவி, பாரதியார் கட்டளையிட்டார். அக்கட்டளையை நிறைவேற்றுவதில் உருவான கன்னிமுயற்சியாகும் இந்நூல். இது வெற்றிகரமான முயற்சியாகும்.

அநேகமாக யாரும் எழுதாத பொருள் பற்றி-பாம்பைப்பற்றி-எழுதி, தமிழ்க் களஞ்சியத்தைப் பெருக்கிய திரு ஆ. சு. இராமலிங்கம் பாராட்டுக்கும் நன்றிக்கும் உரியவர். தமிழ் மக்கள் இந்நூலை வாங்குவதன் மூலம் அவருடைய முயற்சி தொடரவும் மேலும் பல புத்தம் புதிய நூல்கள் வெளிவரவும் வழிவகுப்பார்களென்று நம்புகிறேன்.

சென்னை
17-12-76.

**நெ. து. சு.**

# அணிந்துரை

பத்தாண்டுகளுக்கு முன்பு சிங்கப்பூர் தமிழ்முரசு நாளிதழில் நான் பணியாற்றிக் கொண்டிருந்தபோது திரு ஆ. சு. இராமலிங்கம் அவர்களை அடிக்கடி சந்திப்ப துண்டு. அவரைச்சுற்றி எப்பொழுதும் கூட்டம் இருந்து கொண்டேயிருக்கும். இத்தனைக்கும் அவர் ஓர் அரசியல் தலைவரோ அல்லது கலைஞரோ அல்லர். என்றாலும் ஜால வித்தை காட்டும் நிபுணரைப் போல அவர் பாம்பை வைத்துக்கொண்டு பலரை மகிழ்வித்து வந்ததோடு பல ஆராய்ச்சிகளையும் செய்து வந்தார். சிங்கப்பூரில் எந்தப் பகுதியிலாவது பெரிய பாம்பு காணப்பட்டால் உடனடி யாகத் திரு இராமலிங்கம் அவர்களுக்குத் தொலைபேசி அழைப்பு வரும். பாம்பைப் பிடிப்பதற்கான மரக்கவை முதலான சாதனங்களுடன் அவர் அங்கு விரைந்து போவதை நான் சிலமுறை பார்த்திருக்கிறேன்.

சிங்கப்பூர், மலேசிய பாம்புகள் பற்றி திரு இராம லிங்கத்தைப் போன்று விரிவான அளவிற்கு எவரும் அறிந்திருக்க இயலாது. சிங்கப்பூர் டெலிவிஷனில் இதன் தொடர்பான பல நிகழ்ச்சிகளை நடத்தி இலட்சக்கணக் கான மக்களை மகிழ்வித்திருக்கிறார். 'பாம்பு என்றால் யாரும் பயப்படத் தேவையில்லை அதனோடு மக்கள் பழகி மகிழலாம்' என்ற நம்பிக்கையை ஊட்டும் வகையில் அந்த நிகழ்ச்சிகள் அமைந்திருந்தன. அப்பொழுது செல் வாக்குமிக்க தென்கிழக்காசிய வாரஇதழான 'ஏஷியா மாகஸின்' திரு இராமலிங்கம் அவர்களைப்பற்றி ஒரு வர்ணனைக் கட்டுரையை வெளியிட்டிருந்தது. தக்க முறையில் அவருடைய பணிகளைச் சிங்கப்பூர், மலேசிய தமிழ் அன்பர்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டும் என்ற விருப்பத்தில் பாம்பு ஆராய்ச்சி அனுபவங்களைத் தமிழ் முரசு ஞாயிறு மலருக்குக் கட்டுரையாக எழுதித் தரு மாறு திரு இராமலிங்கம் அவர்களைக் கேட்டுக் கொண்

டேன். ஆர்வத்துடன் அவர் கட்டுரைகளை வழங்கினர். அப்போதே அந்தக் கட்டுரைகள் நூல்வடிவம் பெற வேண்டும் என்ற எண்ணத்தைத் திரு இராமலிங்கம் அவர்களிடம் வெளியிட்டேன்.

ஏறத்தாழ பத்தாண்டுகளுக்குப் பிறகு அந்த எண்ணம் இனிய உருவமாக "பாம்பும் மனிதனும்" எனும் நூல் வடிவில் வெளிவருவது பெரும்மகிழ்ச்சியைத் தருகிறது. ஆராய்ச்சிக் கண்ணேட்டத்தோடு பாம்பு களைப் பற்றி எழுதப்பட்ட நூல்கள் விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிற்குக் கூட இல்லை. திரு இராமலிங்கம் அவர்களின் இந்த அரிய முயற்சியைத் தமிழ் உலகம் விரும்பி வரவேற்கும் என்று பெரிதும் நம்புகிறேன். திரு இராமலிங்கம் முற்றிலும் இலண்டன் வாசியாகிவிட்டாலும் இடையிடையே இதுபோன்ற நல்ல தமிழ் நூல்களைப் படைப்பதன் மூலம் தமிழ்நாட்டுக்கும், தாம் வாழும் நாட்டிற்கும் இடையே பண்பாட்டுப் பாலம் அமைக்கவேண்டும் என்பதே என் விருப்பம்.

அன்பன்,
**ஜே. எம். சாலி, எம். ஏ.,**
உதவி ஆசிரியர்,
ஆனந்த விகடன்

சென்னை—14
25 . 11 . 76

# முன்னுரை

1963 முதல் 1970 செப்டம்பர் திங்கள் வரை கிட்டத் தட்ட ஏழு ஆண்டுகள் பாம்புகளைப்பற்றி நான் நடத்திய ஆய்வின் பயனுக வெளிவருவது இந்த நூல். மலேய்சிய சிங்கப்பூர்ப் பாம்புகள் பற்றியும், இந்திய நச்சுப் பாம்புகள் பற்றியும், நஞ்சற்ற பாம்புகள் பற்றியும், மற்றும் உலகின் மற்ற பகுதிகளிலுள்ள சில முக்கிய பாம்புகள் பற்றியும் இந்நூலில் எழுதி யுள்ளேன்.

மறைந்த டாக்டர் மு. வ. அவர்கள் சிங்கப்பூர் வந்த போதும், முன்னுள் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் தாமரைத்திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர்களோடு லண்டன் வந்தபோதும் பாம்பு நூல் வெளியிட வேண்டும் என்று வற்புறுத்தினுர். இந்நூலை 1970ஆம் ஆண்டிலேயே எழுதி முன்னுரையும் எழுதி னேன். 1970ஆம் ஆண்டு முன்னுரையை மறுபடியும் மாற்றி எழுத வேண்டி வந்தது. 1970இல் சிங்கப்பூரி லிருந்து லண்டன் சென்ற பிறகு ஐந்து ஆண்டுகள் கழித்து 1976ஆம் ஆண்டு சூன் திங்கள் லண்டனி லுள்ள கிராய்டன் இனத் தொடர்புக் கழகப் பிரதி நிதியாக நான் தமிழகம் வந்தபோது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இணைப் பேராசிரியரும் எனது இனிய நண்பருமான டாக்டர் பொன். கோதண்ட ராமன் அவர்களின் பேரூக்கத்தினுல் இந்நூல் வெளி யிடப்படுவது மறக்க இயலாதவொன்று. சென்னையில் இரவு பகலாக என்னேடு இருந்து சில வரைபடங்களை வரைந்து கொடுத்த நெட்டி வேலை நிபுணர் திரு ஜெகன் அவர்களை நான் பாராட்டுகிறேன்.

பாம்புகள் பயங்கர மிருகங்கள் அல்ல என்பதை அட்டைப் படத்திலுள்ள எனது அருமை மகள்

செல்வி அருண்மொழி நிரூபித்துக் காட்டியிருக் கின்றாள்.

"அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் பிறந்தது" என்பதை மூன்றரை வயதுள்ள எனது அருமை மகன் செல்வகுமார் 15—6—76 அன்று சென்னைப் பாம்புப் பூங்காவில் பாம்புகளை லாவகமாகப் பிடித்து நிரூ பித்தான். பிறக்கும்போதே குழந்தைகளுக்குப் பயம் உடன் பிறந்தது அல்ல என்ற கூற்றை என் குழந்தைகள் அருணும், செல்வகுமாரும் நிரூபித் துள்ளனர்.

சிங்கப்பூரிலிருந்தபோது சிங்கப்பூர்த் தரைப்படை அதிகாரிகளின் பயிற்சி வகுப்புகள், ஆங்கிலப் பள்ளிகள். சிங்கப்பூர்த் தலைமை மருத்துவமனை மருத்துவர்கள் கழகம் ஆகிய பல இடங்களில் பாம்பு களைப்பற்றி ஆங்கிலச் சொற்பொழிவுகள் நிகழ்த்திய தோடு, சிங்கப்பூர்க் கல்வி ஒளிபரப் (Educational T.V.) பிலும் தோன்றி உயிர்நூல் மாணவர்களுக்குப் பாம்பு களைப்பற்றிச் சொற்பொழிவு ஆற்றினேன்.

1968ஆம் ஆண்டு ஆசியச்செய்தி இதழ் (Asia Magazine) என்ற இதழில் என்னைப்பற்றியும் எனது மகளைப் பற்றியும் வெளியிடப்பட்ட செய்தி உலகெங்கும் என்னை அறிமுகம் செய்தது. நான் சிங்கப்பூரின் பிரபல தமிழ் ஏடான "தமிழ் முரசு" நாளிதழில் பாம்புகள் பற்றிப் பத்து ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வெளியிட்ட போதும் "தெங்கா டைம்ஸ்" என்ற ஆங்கில இதழில் நான்கு ஆங்கிலக் கட்டுரைகளை வெளியிட்டபோதும் மக்கள் பெரும் வரவேற்பு தந்தனர்.

1968இல் ஜப்பானிய தொலைக்காட்சியில் தோன்றினேன். சிங்கப்பூர்க் கலாச்சார அமைச்சும் ஆறு மொழிகளில் என்னைப் படமாக எடுத்துப் பெருமை சேர்த்தது.

1970இல் ஆனந்த விகடனில் எனது மதிப்பிற் குரிய ஆனந்த விகடன் ஆசிரியர் திரு மணியன் அவர்கள் என்னைத் தமிழகத்திற்குப் பெருமை யோடு இதயம் பேசுகிறது என்ற தொடர்க்கட்டுரையில் அறிமுகம் செய்து வைத்தார். அவருக்கு எனது பணிவான நன்றி!

அமெரிக்காவைச் சேர்ந்த கர்ட் செவரின் (Kurt Severin) என்பார் அமெரிக்காவிலிருந்து சிங்கப்பூர் வந்து என்னேடு நடத்திய பேட்டியைப் பல ஐரோப்பிய நாட்டுப் பத்திரிகைகளில் வெளியிட்டார்கள். அவருக்கு எனது நன்றி.

எனது பாம்பாராய்ச்சிக்கு உறுதுணையாக இருந் தவர்கள் மூவர். சிங்கப்பூரில் 5 ஆண்டுகள் ராயல் விமானப்படைத் தலைமை மருத்துவராகவும், தற்போது பிரிட்டனின் பாதுகாப்புத்துறையில் Aero Aviation Director ஆகவும் இருக்கின்ற Group Captain F. C. Hurrell அவர்கள் என் ஆராய்ச்சிக்கு விமானப் படையின் மருத்துவப் பிரிவில் ஒரு சிறு பாம்புக் கண்காட்சிச் சாலையையும், மிருகக் காட்சிச் சாலை யொன்றையும் நிறுவ எனக்குத் துணை நின்று பெரிதும் உதவினுர். இரண்டாவதாக சிங்கப்பூர்த் தேசியக் கண் காட்சிச் சாலை இயக்குநர் திரு யரிக். ஆல்பிரட் (Eric Alfred) அவர்கள் குறிப்பிடத்தக்கவர். சீதாலட்சுமி இராமசாமிக் கல்லூரியில் விலங்கு நூல் பாடத்தில் பி. எஸ். ஸி. முதல் வகுப்புப் பட்டம் பெற்று அவ்வப் போது பாம்புகளின் உள்ளுறுப்புகள், உணவு முதலான வகைகளை ஆராய என்னேடு இரவு பகலாக உழைத்த என் வாழ்க்கைத் துணைவி திருமதி செயலக்குமி பி.எஸ்ஸி, என்னுடைய பணிகள் எல்லாவற்றிலும் எனக்குத் துணை நிற்பவள்.

இந்நூலை வெளியிட என்னை அடிக்கடித் தூண்டியவர்கள் சிங்கப்பூரைச் சேர்ந்த எனது நண்பர் திரு மு. இராமச்சந்திரனும் சிறுகதை எழுத்தாளர் திரு ஏ. வி. சண்முகமும் ஆவார்கள்.

உலகில் பல நாடுகளில் வாழும் மக்கள் வாழ்வில் பாம்புகளின் வாழ்வு எந்த அளவு தொடர்பு கொண் டுள்ளது என்பதைப்பற்றி ஆங்காங்குக் குறிப்பிட் டுள்ளேன். பாம்புகளின் வியத்தகு குணங்கள். மாந்திரீகம், வைத்தியம், பண்டைய போர் முறையில் பாம்புகளின் பங்கு, பாம்புகள் பற்றிய போலிக் கதைகளுக்கு விளக்கங்கள், பாம்புகளின் நஞ்சின் சிறப்பியல்புகள், பாம்புக்கடி வைத்தியம் ஆகியவை பற்றியெல்லாம் நான் அறிந்தவரை அறிஞர்களின் ஆதாரங்களை மேற்கோள் காட்டி எழுதியுள்ளேன்.

இந்நூலுக்கு மிக்க அன்புடன் ஒரு இனிய சிறப்புரை வழங்கியருளிய தாமரைத்திரு நெ. து. சு. அவர்கட்கு மிகுந்த நன்றியுடையேன். அணிந்துரை வழங்கியருளிய நண்பர் திரு ஜே. எம். சாலி அவர்கட்கு என் அன்பு கலந்த நன்றி.

நான் ஒரு பட்டதாரியல்ல! ஒரு சாமானியன்! அறிஞர்கள் என் நூலைப் படித்து இதிற் கண்ட குறைகளை எழுதினால் வரவேற்றுத் திருத்தி வெளி யிடுவேன்.

இந்நூலைப் படித்தபின் பாம்பு இனத்தின் மேல் இரக்கம் வைத்து அவைகளைத் துன்புறுத்தாமல் விடுகின்ற பெருந்தன்மை வாசகர்களுக்கு வருமானால் அதுவே இந்நூல் வெளியீட்டின் வெற்றியாகும் என்று கூறி இந்நூலைத் தமிழகத்தின் முன்பு படைக் கின்றேன்.

லண்டன்
25—5—76

**ஆ. சு. இராமலிங்கம்**
சமூகச் சேவையாளர்



நூலாசிரியரின் மகன் செல்வகுமார்

## படைப்பு

என்னை ஈன்று மறைந்த எனது அருமை அன்னை திருமதி அம்மாக்கண்ணு அவர்களுக்கும் என்னை ஆளாக்கித் தற்போது தஞ்சை மாவட்டம் திருப்பாலக்குடியில் வதியும் எனது அருமைத் தந்தை திரு கு. ஆ. சுப்பிரமணியம் அவர்களுக்கும் இந்நூலைப் படைக்கிறேன்.

# பொருளடக்கம்

# 1

# அச்சமும் ஆவலும்

1962ஆம் ஆண்டுக்கு முன்பு பாம்புகள் என்ற பெயரைக் கேட்டாலே ஒரே பயம்! அன்று இரவு முழுதும் தூங்க முடியாது. சென்னைப் பல்கலைக் கழகத்தில் பி. எஸ்ஸி. இறுதி வகுப்பில் படித்துக்கொண்டிருந்த எனது மனைவி பாடம் செய்யப்பட்ட மிருக வகைகள் சில சிங்கப்பூரிலிருந்து அனுப்புமாறு எழுதியிருந்தாள். பாம்புகளை ஒரு சீசாவிற்குள்ளேயே அடக்கிப் பாடம் செய்து அனுப்பிவிடலாம் என்பதால் அவைகளையே குறிப்பாக எழுதினாள். அச்சமயத்தில் நான் "பாம்புக் கோழை" என்பதை அவள் அறியவில்லை.

பல இடங்களைச் சுற்றி சிங்கப்பூர் தேசியக் கண்காட்சிச் சாலை இயக்குநரிடம் சென்றேன், அன்றுதான் இயக்குநர் திரு. எரிக் ஆல்பிரட் அவர்கள் எனக்கு முதல் அறிமுகம். தேசியக் கண்காட்சிச் சாலையிலுள்ள பாம்புகள் அனைத்தும் பதிவு செய்யப்பட்டுள்ளதால் கொடுக்க இயலாது என்றுகூறி, "ஏன், பாம்புகளைச் சுலபமாகப் பிடிக்கலாமே" என்றார். "என்னையா?" என்றேன். பாம்புகளைப் பிடித்து துணைவியின் படிப்பிற்காக மட்டும் அனுப்பி வைப்பதோடு இல்லாமல், தொடர்ச்சியாகப் பாம்புகளைப் பற்றிப் படித்தால் நல்ல எதிர்காலம் உண்டு என்று கூறினார். ஒரு புத்தகத்தை எனது கையில் கொடுத்தார். டுவீடி (Tweedie) என்பார் எழுதிய "மலாயாப் பாம்புகள்" என்ற நூல்தான் அது. "பிள்ளையார் பிடிக்க, குரங்காய் முடிந்த" கதைபோல புத்தகத்தைக் கையில் வாங்கி வீடு வரும்போது பேருந்து வண்டியிலேயே பிரித்துப் பார்த்தேன். ஒரே பாம்புப் படங்கள். வீடு வந்ததும் நேரே புத்தகத்தை அலமாரியில் வைத்துப்

பூட்டினேன். அன்று இரவு நெடுநேரங்கழித்துப் பாம்புக் கூட்டமே ஒன்று படை எடுத்தது. ஒன்று என் கழுத்தைச் சுற்றியது. ஒன்று எனது காலை இறுக்கியது. ஒன்று எனது கண்ணைக் குறி பார்த்துக் கொத்தியதுதான் தாமதம், ஒரு பெரும் அலறல்! கண்ணை இறுக்கி மூடினேன். மறுபடியும் மறுபடியும் கண்ணை விழித்தபோது, எல்லாம் பயங்கரக் கனவு! உடலெல்லாம் பயத்தால் வியர்த்தது, காலை மணி 6 அடித்தது. எப்படியாவது திரும்பி அந்தப் பாம்புப் புத்தகத்தைத் திரும்பக் கொடுத்துவிட எண்ணி 9 மணி அளவில் புறப்பட்டேன் தேசியக் கண்காட்சிச் சாலையை நோக்கி!

எனக்கு எப்போதுமே ஒரு பிடிவாதக் குணமுண்டு. எடுத்த காரியத்தை முடிக்காவிட்டால் நிம்மதியே இருக்காது. அச்சம் ஒரு பக்கம்! கோழைத்தனம் என்னை இடித்தது! எனது பிடிவாதக் குணம் தலைதூக்கி என்னை இழித்துரை கூறுவது போன்ற உணர்வுக்கு ஆட்படுத்தியது.

இயக்குநர் என்னைக் கண்டதும் "அதற்குள்ளாகவா புத்த கத்தைப் படித்து முடித்துவிட்டீர்கள்?" என்று கேட்டார். சமாளித்துக்கொண்டு, "இல்லை, பாம்புகளை எப்படி பிடிப்பது?" என்று அறிய வந்தேன் என்றேன். "ஒரு சிறிய கவைக்கம்பு, ஒரு சிறிய சாக்குப்பை போதுமே." என்றார். "சரி. முயற்சிக் கிறேன்" என்று வீடு திரும்பினேன். மறுநாள் துணிவை வரவழைத்துக் கொண்டு பாம்புகளைப்பற்றி அவர் தந்த முதல் நூலைப் படிக்க ஆரம்பித்தேன்.

நான் வேலை செய்யும் இடம் ஒரு விமான தளம். வெள்ளையர் ஒருவர் ஒருநாள் ஒரு பெரிய மலைப்பாம்பைத் தோளிலே போட்டுக்கொண்டு வந்தார். எட்டியிருந்தே ரசித்த என்னைக் கண்டதும் அருகில் வந்து "தொட்டுப்பார்!" என்று அன்போடு அழைத்தார். தைரியம் அனைத்தையும் வரவழைத்துக் கொண்டு அந்தப் பாம்பின் உடலை லேசாகத் தடவினேன். என் உடலில் ஒரே புல்லரிப்பு. அச்சமும் தைரியமும் கலந்த உணர்வு. மதக் குருக்களிடம் தீட்சை பெறும் பக்தகோடிகள் பெறும் ஒருவகை உணர்வு என்னை ஆட்சி செய்தது. இதுபோல ஒருநாள் பாம்பு களோடு பழகும் வாய்ப்பு கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு அன்று வீடு வந்தேன்.

ஒரு திங்கள் கழிந்தது. எனது அலுவலகத்தில் பணி புரிந்து கொண்டிருந்தபோது, வெளியே பலகைகளைப் புரட்டிக் கொண்டிருந்த மலாய்க்காரர் சிலர் "உலார்" "உலார்" என்று மலாய் மொழியில் சத்தமிடவே வெளியே ஓடிப் பார்த்த போது பலகைக்கு அடியில் ஒரு பாம்பு இருப்பதாகக் கூறினார்கள். மெதுவாகப் பலகையைக் கிளப்புமாறு பணித்து விட்டு, கையில் நான்கடி நீளமுள்ள கழியுடன் தயாராக நின்றேன். பலகை தூக்கப்பட்டது. சுமார் ஒன்றரை அடி நீளமுள்ள தவிட்டு நிறமுள்ள பாம்பு ஒன்று நகர்ந்தது. உடனே வீரத்தோடு பாம்பின் கழுத்தின் பின்புறம் கழியால் அமுக்கிக்கொண்டு மெதுவாக அதன் கழுத்தைப் பிடித்து விட்டேன். உடனே பாக்கி உடல் எனது கையைச் சுற்ற, எனது பிடி இறுக, பாம்பினை வேகமாக தரையில் வீசி எறிந்தேன். அந்தச் சிறிய பாம்பு துடி துடித்துச் செத்தது.

என் வாழ்விலே ஒரு பெரிய தீரச் செயலைச் செய்ததாக எனது மனம் வீராப்பைக் கக்கினாலும், உள்மனம் மட்டும் ஒரு சிறிய பாம்பைத் துடிதுடிக்கக் கொன்றுவிட்டாயே என்று கடிந்தது.

இறந்த பாம்பினை எடுத்து எனது மேசை மேல் வைத்துப் புத்தகத்தைப் புரட்டி அந்தப் பாம்பைப்பற்றிப் படித்தபோது, அது ஒரு விஷமற்ற வீட்டுப் பாம்பு என்பதனை அறிந்து துயருற்றேன். இந்த முதல் அச்சநிலையில் துவக்கிய பாம்பு பிடித்த நிகழ்ச்சி, ஒரு ஆர்வத்தை எனது உள்ளத்தில் வளர்த்தது. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு பாம்புகளைத் தேடிப் பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டேன். நாட்கள், மாதங்கள், ஆண்டுகள் உருண்டன. விடுமுறை நாட்களில் வெள்ளையர் ஒரு சிலருடன் காடுகளுக்குச் சென்று பாம்புகள் தேடும் வேலையில் ஈடுபட்டேன். இந்த வேலை பகல் இரவு என்று பாராது நடைபெற்றது. இந்த முறையில் பிடிக்கின்ற பாம்புகளின் நிறம், நீளம், பிடித்த இடம், கண்ணின் அமைப்பு, செதில்கள் ஆகிய விவரங்களைக் குறிப்பெடுத்து, பாம்பு நூல் வல்லார் எழுதியுள்ள நூல்களையும் துருவி ஆராய்ந்து ஒத்திட்டுப் பார்க்க ஆரம்பித்தேன். ஆர்வம் வளர்ந்தது. முயற்சி என்னை முன்னுக்குக் கொண்டுவரத் துணைசெய்தது. துணிவு எனக்குத் துணை நின்று எனது முயற்சிக்கு ஊக்கம் தந்தது.

இடையிடையே எனக்கு எழும் சந்தேகங்களைத் தேசிய நூல் நிலைய இயக்குநரிடம் கேட்டுத் தெளிந்தேன்.

1969ஆம் ஆண்டு, இந்நூலை நான் எழுத ஆரம்பிக்கின்ற சமயம் பாம்புகள் பற்றி அறிந்த ஒரு சிலரில் நான் ஒரு முக்கியமான மனிதன் என்ற இடத்தைப் பெற்றுவிட்டமைக்குக் காரணம் எனது ஆர்வம், துணிவு, விடாமுயற்சிதான் எனப் பெருமையோடு கூறமுடியும்.

1970 ஆகஸ்டு திங்கள் வரை எனது வீடே வகை வகையான பாம்புகள் பாடம் செய்யப்பட்டும், உயிருடனும் தோன்றும் ஒரு ஆய்வுக்கூடமாகத் திகழ்ந்தது. 1970 செப்டம்பரில் நான் பிரிட்டனில் குடியேறியபோது எனது பாம்புகளைக் காட்டில் சுதந்திரமாக உலவுமாறு விடுதலை செய்தேன். பாடம் செய்யப்பட்ட 30 வகைப் பாம்புகளை லண்டனுக்குக் கொண்டு சென்றேன்.

# 2

# பாம்பு உலகம்

உலகம் எப்படிப் பரந்து கிடக்கின்றதோ, அதேபோல் பாம்புகளும் உலகெங்கணும் வாழ்கின்றன. பாம்பே இல்லாத நாடுகளில் குறிப்பிடத்தக்கவை கிரீன்லாந்து, நியூஸிலாந்து ஆகிய நாடுகள். தற்காலத்தில் மனிதனின் ஆயுளின் சராசரி 60 ஆண்டுகள் என்ருல் பாம்புகளின் வயதை 100க்கு மேல் என்று விலங்கியல் நிபுணர்கள் கணக்கிட்டுள்ளனர்.

மனிதன் தன் வாழ்வில் ஒரு சில துறைகளில் ஈடுபட்டு, ஏதாவது ஒரு துறையில்தான் வெற்றி காண்கிருன்; அல்லது தோல்வியடைகிருன். ஆனுல் பாம்புகள் மனிதரின் வாழ்வு முறை, சமயம், மதம், போர்முறை, மருத்துவம், வழிபாடு ஆகிய அனைத்திலும் பங்குபெற்றுப் பெருமை பெற்றுள்ளன. ஆகவே இரு கையும், காலும், பகுத்தறியும் திறனும் படைத்த மனிதரைவிடக் கைகளோ, கால்களோ இல்லாத பாம்புகள், உலகில் ஒரு தனி இடத்தைப் பெற்றது வியப்பிலும் வியப்பே!

எண்ணிக்கையில் பலகோடியுள்ளோம் என்று நாம் மார்தட்டினுலும், உலகிலுள்ள பாம்புகளின் வகைகள் மட்டும் ஐயாயிரம் வகை என்றும், இந்த ஐயாயிரத்திலுள்ள எத்தனையோ துணை வகைகளையும் கணக்கிட்டால் பாம்புகளின் எண்ணிக்கையும் பல கோடி என்று கணக்கிட வேண்டிவரும்.

பகுத்தறிவுள்ள மனித இனத்தில் சாதியின் பெயராலும், மதத்தின் பெயராலும், கடவுளின் பெயராலும் பல உட்பிரிவு களைப் பிரித்து வைத்துக்கொண்டு சண்டை பிடித்துக்கொண்டு நேரத்தை வீணுக்குகிருேம். ஆனுல் பாம்புகளிடத்தில் இந்தப் பாகுபாடு காணமுடியாது. அந்தந்தப் பாம்பு வகைகளும்

அவைகள் வாழுகின்ற இடத்திற்கேற்பத் தனது வாழ்வை அமைத்துக்கொண்டு அமைதியாக மனிதரின் நல்வாழ்வுக்கு மறைமுகமாக உதவிபுரிகின்றன என்பதை நாம் மறந்துவிட முடியாது.

பாம்புகளிடத்தில் காதல் உண்டு. கருத்தரித்தலும் உண்டு. முட்டையிட்டு அடைகாக்கும் பாம்புகளும் உண்டு. குட்டி போடும் பாம்புகளும் உண்டு. ஆனால் ஒரே ஒரு குறிப்பிடத் தக்க குணம் என்ன வென்றால் முட்டையிலிருந்து குட்டி வெளியானதும், தாய்ப்பாம்போ, தகப்பன் பாம்போ தன் குட்டிகளை அருகிருந்து வளர்ப்பதில்லை! குட்டிகளும் தாய் தந்தைப் பாம்புகளின் உதவியை நாடுவதும் இல்லை! தாங்களே இரைதேடி வளர்ந்து பெரியவைகளாகின்றன. இந்தக் குணம் உலகில் மற்ற எந்த மிருகங்களிடத்திலும் காணப்படாத ஒரு தனிக் குணமாகும்.

மொத்தமுள்ள ஐயாயிரம் வகைப் பாம்புகளில் அத்தனையும் விஷப்பாம்புகளில்லை. மொத்தத்தில் ஒரே ஒரு சதவீதம்தான் நஞ்சுள்ள பாம்புகளாகும். ஒரு குடம் பாலுக்கு ஒரு துளி விஷம் என்பார்கள். ஒரு துளி விஷம் ஒரு குடம் பாலையே நஞ்சாக்கி விடுதல்போல, ஒரு சதவீத நச்சரவங்களின் எண்ணிக்கையை வைத்துப் பாம்பு இனம் முழுவதையுமே நஞ்சுள்ளவைகள் என்று கற்பனை செய்து நாம் வெறுத் தொதுக்கி விடுகிறோம்.

பாம்புகளை நாம் உற்று நோக்கினால் அதன் கண்கள் இமைப்பதில்லை என்பதை நாம் காணமுடியும். பாம்புகளுக்குக் கண் இமையே இல்லை, தமிழகத்திலே மக்களையும், தேவர் களையும் பிரித்துக் கூறும்போது, தேவர்களை இமையா நாட்டத்தவர் என்று புராணங்கள் கூறுகின்றன.

இமையா விழி கொண்ட, இக்காரணத்தினால்தானோ என்னவோ, பாம்புகளைத் தெய்வமாக இந்திய நாடு வழிபட்டு வருகிறது. பாம்புகளுக்குக் கோவில் எடுத்திருப்பதும், பாம்புப் புற்றுக்குப் பால் வார்ப்பதும், நாக பஞ்சமி என்ற விழாக் கொண்டாடுவதும், ஆண்களுக்கு நாகப்பன் நாகராசன் என்றும், பெண்களுக்கு நாகம்மை என்று பெயரிட்டழைப்பதும் பாம்புகள் எந்த அளவு கடவுள் தன்மை பெற்று வாழ்கின்றன என்பதைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

உயிர் நூலாசிரியர்களும், அறிவியல் அறிஞர்களும் பாம்பின் நஞ்சு, உலகினை அழிக்கும் கொடிய வியாதிகளுக்கு அருமருந்தாக உபயோகப்படுத்தப்படுவதை உறுதிப்படுத்தியுள்ளனர். பாம்பு உலகம் உலகத்தை அச்சுறுத்துகிறது என்பதற்குப் பதில் பாம்புகளே உலகத்தின் கொடும் வியாதிகளைக் குணப்படுத்த உபயோகப்படுகின்றன என்பதும் விந்தையல்லவா ?

எரிகின்ற மெழுகு வர்த்தியில் கை வைத்தால் சுடுதல் போல, நாம் தொல்லை கொடுக்கும்போது பாம்பு கடிக்கிறது. மெழுகுவர்த்தி தன்னை அழித்து ஒளி தந்து மறைவதுபோல, பாம்புகளும் தன்னை அழிக்க வருபவருக்கே அருமருந்தாக நின்று துணை செய்து அழிகின்றன. இதுதான் பாம்பு உலகின் உயர்ந்த தன்மை.

3

# பாம்பின் மகத்துவம்

பாம்பின் மகத்துவங்கள் எண்ணற்றவை. வரலாற்றுக் காலத்துக்கு முன்பிருந்தே இவைகள் சிறப்பைப் பெற்று விளங்கியிருக்கின்றன. இச்சிறப்பியல்புகளில் ஒரு சிலவற்றை இங்குக் குறிப்பிட்டுள்ளேன்.

உண்ணலும், உறங்கலும் உயிர்வாழினத்திற்கு உயிர் போன்றவை. உண்ணல் இல்லை என்றால் உயிர் இல்லை. மனிதர்களாகிய நாம் ஒரு நாள் அல்லது இருநாட்கள் உண்ணாமலிருந்தால் உடல் நிலையில் எவ்வளவோ குழப்பங்கள் நிகழுகின்றன.

ஆனால் பாம்புகள் உண்ணாமலே பல மாதங்கள் உயிரோடிருக்கும் என்பதைப் பல சோதனைகள் மூலம் நிரூபித்துள்ளனர். ஆறு மாதம் வரை கூட உண்ணாது பாம்புகள் உயிர் வாழ்ந்துள்ளன.

நான் நடத்திய சோதனைகளில் இரு பாம்புகள் இடம் பெற்றன. முன்னது ஓலைப்பாம்பு (Kukri Snake) என்ற விஷமற்ற ஒரு அடிநீளமுள்ள பாம்பு. இப்பாம்பினை ஒரு பெட்டியில் அடைத்துக் கண்காணித்து வந்தேன். உணவோ, தண்ணீரோ கொடுக்காமல் மூன்று வாரம் வரை கண்காணித்தேன். 23ஆம் நாள் அந்த பாம்பு இறந்தது. இப்பாம்பு நான்கு அடி நீளம் வரை வளரும் மலாய்சியா, சிங்கப்பூரில் காணப்படும் பாம்பாகும். நான் சோதனை நடத்திய பாம்பு இளம் பாம்பாகும்.

இரண்டாவது ஒரு சாதாரண பென்ஸிலில் பாதிப்பருமனேயுள்ள நஞ்சுள்ள பவழப் பாம்பாகும் (Coral Snake). இது பதினோரு நாள் வரை உண்ணாமல் இருந்தது. தங்களின் உடலி

லுள்ள சக்தியையே தாங்கள் நீண்டகாலம் உயிரோடு வாழ இவைகள் பயன் படுத்துகின்றன.

உண்ணுது நீண்டகாலம் பாம்புகள்போல் உயிர்வாழும் மிருகங்கள் இல்லை என்றே கூறலாம்.

பாம்புகள் தோலுரிக்கும்போது அவைகளின் இளமையைப் புதுப்பிக்கின்றன.

பாம்பு நூல் வல்லாரான ரமோனு, டெஸ்மான்ட் மோரிஸ் (Ramona & Desmond Morris) என்பார் தன்னுடைய நூலில் பாம்புகளின் மேற்கண்ட குணங்களைப் பாம்புகள் மறுபிறப்பினை தாங்கள் வாழும்போதே எடுத்து நூற்றுக்கணக்கான ஆண்டுகள் வாழ்வதைக் குறிப்பிட்டுள்ளார். இந்தப் பெருமகத்துவம் காரணமாகவே கிரேக்கர்கள் பாம்பு வழிபாடு செய்தது பற்றியும், மனித உற்பத்திக்கு மூலக்காரணமாகவுள்ள ஆண் குறியினைப் பாம்போடு இணைத்தும் பேசப்பட்டு வந்துள்ளது. சைவர்கள் வழிபடும் லிங்க வழிபாடும் உயிருற்பத்தியைக் காட்டுவதாக அமைந்ததிலிருந்து, இந்த உயிருற்பத்திக்கும் பாம்பின் சக்திக்கும் இணைப்பைக் காட்டி எழுதியுள்ளார்கள்.

உணவு உற்பத்தியின் அழிவைக் காப்பாற்றப் பாம்புகள் செய்யும் சேவை மிகச் சிறந்ததாகும். நெற்பயிர், கதிர்விட்டு அறுவடைக்குத் தயாராகும் நிலையில் எலிகள் இந்த நெற்கதிர்களைச் சூரையாடிப் பெரு நட்டத்தை விளைவித்து விடுகின்றன. இதனுல் கோடிக்கணக்கான பண நட்டமும், பல லட்சம் டன் தானிய நட்டமும் ஏற்பட்டு நாட்டிலே பஞ்ச நிலைமை உருவெடுத்து விடுகிறது. இது போன்று பஞ்ச நிலைமைக்கு எலிகளால் ஆக்கப்பட்ட நாடுகளில் இந்திய நாடும், இந்தோனேஷியா நாடும் குறிப்பிடத் தக்கவை.

அண்மையில் இறந்த முன்னுள் இந்தோனேஷியா அதிபர் முன்பு ஒருமுறை தனது நாட்டில் ஏற்பட்ட பஞ்ச நிலைமையைச் சமாளிக்க, தன்னுடைய மக்களை எலிகளை உண்ணுமாறு கேட்டுக்கொண்ட செய்தி பத்திரிகையில் பிரசுரமாகியிருந்தது. இந்த எலிகள் செய்யும் தொல்லையை டாக்டர். பி.கே. டியோராஸ் என்ற நிபுணர், 1919 இல் டாக்டர் குன்ஹார்ட் எழுதியதைக் குறிப்பிடும்போது, 20 ஆண்டுகளில் 1241 கோடி ரூபாய் நட்டத்தை இந்த எலிகள் ஏற்படுத்தியதாகக் குறிப்பிட்டுள்ளார்.

அவர் மேலும் குறிப்பிடும்போது இந்த எலிகளால் பரப்பப்படும் கொள்ளை நோயான ''பிளேக்'' நோயால் 1898 முதல் 1948 வரை ஒரு ஆண்டுக்கு இரண்டு லட்சத்து நாற்பத்து ஏழாயிரத்துப் பதினைந்துபேர் வரை கொல்லப்பட்டனர் என்றும், அதில் இந்திய நாட்டிலுள்ள **பாம்பே மாகாணத்தில்** மட்டும் ஒரு ஆண்டுக்கு 20,000 பேர் வரை எலிக் கடி நோயால் பாதிக்கப்பட்டு மருத்துவமனைகளில் அனுமதிக்கப்பட்டதையும் குறிப்பிட்டுள்ளார்.

எலிகள் ஏற்படுத்தும் இதுபோன்ற அழிவினைத் தடுக்க மருந்துகளைவிடப் பாம்புகளே இவ்வெலிகளைக் கொன்று, மனித இனத்திற்கும், தானிய வளர்ச்சிக்கும் பெரும் உதவி செய்பவைகளாக இருப்பதை நாம் மறக்க முடியாது.

''உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்'' என்பதற்கேற்ப, மனித இனத்திற்குத் தேவையான, உயிர்காக்கும் உணவு தானியத்தின் அழிவினைக் காக்கும் தெய்வமாக விளங்கும் இப் பாம்புகளை நாம் எவ்வளவு போற்றினாலும் தகும். இதன் காரணமாகவே பாம்பு வேட்டையாடுவதை பல மாநிலங்களில் இந்திய அரசு தடை செய்துள்ளது.

பாம்புகள் எலிகளைக் கொல்வதோடு மட்டுமல்ல, அவைகள் மனித இனத்திற்கு உண்ணும் உணவாகவும் பயன்படுகின்றன. 28 அடி நீளம் வரை வளர்ந்தும், பல நூறு பவுண்டு எடையும் உள்ள மலைப் பாம்புகளின் தசைகளை உண்ணுவதில் சீன சமுதாயமே முன்னணியில் நிற்கின்றது.

ஹாங்காங், சீனா, சிங்கப்பூர், மலேய்சியா முதலிய இடங்களில் பாம்பு இறைச்சி விற்கும் கடைகள் பல உள்ளன.!

அண்மையில் நான் சந்தித்த சீன மருத்துவர் ஒருவர், ஒரு பெரிய சாடியில் பல விஷப் பாம்புகளை ஊறப்போட்டிருந்தார். அதைப்பற்றி அவரிடம் கேட்டபோது, பிரசவ சமயத்தில் தாய்மார்களின் பிரசவ வேதனையைக் குறைக்கவும், சன்னி நோய் ஏற்படாமல் தடுக்கவும் அப்பாம்பு மருந்து உபயோகப்படுவதாகக் கூறினார்.

பாம்பின் மகத்துவம் இன்னும் எத்தனையோ உண்டு. அவைகளைப் பின்பகுதியில் குறிப்பிட்டுள்ளேன்.

# 4

# வியத்தகு குண இயல்புகள்

நம்மில் பலருக்குப் பலவித குணங்கள் வழி வழியாகவும் பழக்கத்தினாலும் வந்தவைகளாக அமைந்து நிற்கின்றன.

அற்பமான பாம்புகளுக்கு என்ன அப்படி வியத்தகு குணங்கள் உண்டு என்று நம்மில் பலர் அறிந்துகொள்ள விரும்புவது இயற்கையே. இப்பகுதியில் பொதுவாகப் பாம்பு களுக்கு இயற்கையாக அமைந்துள்ள வியத்தகு குணங்கள் பற்றிக் குறிப்பிட்டுள்ளேன். உணர்ந்து படிப்பவருக்குப் பாம்பு களின் படைப்பில் இயற்கையின் பலதரப்பட்ட படைப்புத் திறனைக் கண்டு ரசிக்கும் வண்ணம் பாம்புகளின் குண இயல்புகளை அறிய முடியும்.

ஒரு குடும்பம் என்று நாம் எடுத்துக்கொண்டோமானால், அக் குடும்பத்தில் ரத்தபாசத்தினால் தொடர்புகொண்ட, பங்காளிகள் உறவினர் கூட்டமும் அடங்குகிறது. சில குடும்பத் திற்குப் பட்டப் பெயரும் உண்டு.

ஓலைப் (Kukri) பாம்பினை எடுத்துக்கொண்டால் அந்தக் குடும்பத்திலே மூன்று வகைகள் (மலேஷியாவில்) உண்டு. உருவ அமைப்பு ஒன்றுனாலும் வண்ண அமைப்பு மட்டும் சிறிது மாறுபடும்.

இதேபோல் மலைப்பாம்புக் குடும்பத்தை எடுத்துக் கொண்டால் மலாய்சியா சிங்கப்பூரில் இரண்டு வகை மலைப் பாம்பு உண்டு. நாகத்தை எடுத்துக்கொண்டாலும் இரண்டு வகை என்று கூறமுடியும். சில பாம்புக் குடும்பங்களில் ஏழு துணைவகைகளும், உருவ அமைப்பு வித்தியாசங்களும் உண்டு.

பாம்புகளில் பெரும்பகுதி முட்டையிட்டுக் குட்டி வெளிவருகிறது. சில முட்டை இடாதவாறு குட்டியையே பெற்றுவிடுகின்றன. குறிப்பாக இக் குட்டிபோடும் வரிசையில் விரியன் வகைகளே அதிகம். முட்டையிடும் பாம்புகளுக்கு ஓவி பேரஸ் (Ovi Parus) என்றும், குட்டிபோடும் பாம்புகளுக்கு ஆங்கிலத்தில் விவி பேரஸ் (Vivi Parus) என்றும் பெயருண்டு. சாதாரணமாக ஒரு பாம்பு குறைந்ததாக 6 முட்டைகளும் மிக அதிகமாக 120 அல்லது 130 முட்டைகள் வரையும் இடும். இந்திய மலைப்பாம்புகளில் மொலாரிஸ் என்ற வகையே இது போன்று நூற்றுக்கு அதிகமான முட்டையிட்டதாகப் பேராசிரியர் டாக்டர் டி. யூ. எப். டுவீடி (T. W. F. Tweedie) என்பார் குறிப்பிட்டுள்ளார். நான் வளர்த்த பாம்புகள் ஆறு முதல் 15 வரை முட்டைகள் இட்டன.

பாம்புகளின் முட்டையிலிருந்து கரு வளர்ந்து குட்டியாக வளரும்போது முட்டையின் தோலை உடைத்து வெளிவர சில வகைப் பாம்புக் குட்டிகளுக்குக் கீழ்வாய்த்தாடையில் முளைக்கும் பல் இம்முட்டையை உடைத்து வெளிவரத் துணை செய்கிறது. இதற்கு முட்டைப்பல் எனப் பெயர். ஆனால் இம் முட்டைப்பல் எல்லா வகைப் பாம்புக்குட்டிகளுக்கும் அமைவதில்லை.

தற்காலத்தில் புதிய வீடுகள் கட்ட வரைபடக்காரர்கள், பொறி இயல் வல்லுநர்கள் உதவியும் பலபேருடைய உழைப்பும் தேவைப்படுகிறது. ஒரு சிறு குடிசையைக் கட்டுவதானாலும் பலருடைய உதவியும் உழைப்பும் தேவைப் படுகிறது.

கைகளோ, கால்களோ இல்லாத ராஜ நாகங்களின் குடியிருப்பு அமைப்பு பாம்புகளின் உலகத்திலேயே சிறப்புப் பெற்றுள்ளன. இந்த ராஜ நாகங்களின் வீடு சருகுகளால் ஆனது. தன்னுடைய வாயை உபயோகித்து காய்ந்த சருகுகளைக் கொண்டே இப்பாம்பு தன்னுடைய வீட்டை அமைக்கிறது. இந்த வீடு இரு அறைகளைக் கொண்டது. மேல் அறை, கீழ் அறை ஆகிய இரண்டில், கீழ் அறையில் பாம்பு முட்டைகளை இடுகிறது. மேல் அறையில் பாம்பு படுத்துக்கொண்டு அடை காக்கிறது. இந்த அரிய உண்மையை டாக்டர் டுவீடி மிக அழகாக விளக்கியுள்ளார். மாடி வைத்து வீடு கட்டும் மனிதர்களைவிட இப்பாம்பு எவ்வளவு திறன் பெற்றிருக்கிறது எனப் பாருங்கள்.

**நுகர்வாற்றல்**

நம் நுகர்வாற்றலுக்குத் துணை நமது மூக்கு. ஆனால் பாம்புக்கு மூக்கிருந்தாலும் அதன் நுகர்வாற்றலுக்குத் துணை நிற்பது அதன் நாக்குத்தான். பாம்பின் நாக்கினை உற்று நோக்கினல், அது அடியில் மென்தசையினால் இணைக்கப்பட்டு முன்புறம் இரட்டையாகப் பிளந்திருப்பதைக் காணமுடியும். இந்த நாக்கினைப் பாம்பு வெளியே வேகமாக நீட்டி உள்ளே இழுப்பதைக் காணமுடியும். இது வேறெதற்கும் இல்லை. நுகர்வதற்குத்தான்!

பாம்பின் நாக்கின் நுனியில் நுகர்வாற்றலைக் கொண்ட நுண் சுரப்பிகள் இருக்கின்றன. பாம்பு நாக்கினை வெளியே நீட்டும் போது மணத்தைக் கிரகித்து, உடனே உள்ளே இழுத்து மேல் வாயில் அமைந்துள்ள "ஜாகோப்ஸன்" (Jacobson) சுரப்பியைத் தொடுகிறது. நுகர்வாற்றலைப் பெற்ற அச்சுரப்பியில் இணைந்துள்ள நுண் நரம்புகள் உடனே மூளைக்கு அவ்வாற்றலை அனுப்பியதும், மூளை எந்த மணம் என்பதைப் பகுத்துப் பாம்பினை மணத்திற்கு ஏற்றவாறு இயக்குகிறது.

மனித வாடையை இதுபோல் அறிந்து பாம்புகள் பதுங்கவும், மற்ற சிறிய எலிபோன்ற மிருகங்கள் வந்தால் அவைகளைப் பிடிக்கவும் இந்த ஆற்றல் பாம்பிற்குத் துணை செய்கிறது.

நான் பிடிக்கின்ற பாம்புகளைப் பழக்கவும் இந்நுகர் வாற்றல் துணை செய்கின்றன. ஒரு பாம்பினைப் பிடித்து உடனே பெட்டியில் அடைத்து மறு நாளே எடுத்து நான் விளையாடவோ என் குழந்தை அருண்மொழி கையில் கொடுத்து விளையாடவோ முடியாது.

முதன் முதலில் பாம்பு அடிக்கடி என்னைப் பார்க்கும்படி செய்து கொண்டு, முனையில் வளைந்த ஒரு நீண்ட கம்பியின் மூலம் பாம்பை லேசாகத் தூக்கி மெதுவாக எனது உள்ளங்கைகளில் வைத்துப் பாம்பு எனது கையில் ஊர்ந்து செல்லுமாறு அனுமதிப் பேன். இப்படிப் பாம்பு அடிக்கடி ஊர்ந்து எனது கை, உடலின் பாகங்களை நுகர்ந்து உணர்ந்த பிறகு, பாம்பு எனக்கு எவ்வித தொல்லையும் செய்வதில்லை. கம்பியை உபயோகித்துப் பாம்பைத் தூக்குவதற்குப் பதில் கையாலேயே பாம்பைத் தூக்கினாலும் பழகிய பிறகு பாம்பு என்னை ஒன்றும் செய்யாது.

பாம்பின் நுகர்வாற்றலுக்கு அதன் மூக்கைவிட நாக்கே பெருந்துணை செய்கிறது என்பதை நாம் அறிந்தோம்.

**வெப்ப உணர்வாற்றல்**

பாம்பின் வியத்தகு குணங்களைக் குறிப்பிடும்போது இந்த வெப்பநிலை உணர்வாற்றலையே முதன்மையாகக் குறிப்பிடலாம்.

பாம்பு வகைகளில் மலேய்சியா, சிங்கப்பூர் ஆகிய இருநாடு களிலும் வாழும் பாம்புகளில் விஷமுள்ள குழிவிரியன்கள் (Pit Vipers) ஒருவகையாகும். இக்குழிவிரியன்களுக்கு மூக்கிற்கும் கண்ணிற்கும் இடையேயுள்ள குழிபோன்ற ஒரு பாகத்துக்கு லோரியல் குழி (Loreal Pit) என்று பெயர். இக்குழி வேறு ஒரு சில பாம்புகளுக்கு அபூர்வமாக அமைந்திருந்தாலும் இக்குழிவிரியன் வகைகள் அனைத்திற்கும் குழிவிரியன்கள் என்ற பெயர், இக்குழியின் சிறப்பை வைத்தே அமைந்தது.

வயிற்றை வளர்த்து உயிரைக் காப்பாற்ற மக்களிடத்திலே உழைப்பும், போட்டா போட்டியும், வஞ்சமும், பொய்யும், சூதும் தலைவிரித்தாடும் இக்காலத்தில், இக் குழிவிரியன்கள் மட்டும் எவ்வித போட்டா போட்டியுமின்றி மிகச் சுலபமாக இரைதேடி உண்ணுவதற்குக் காரணம் இந்த "லோரியல்" குழிகள் தான்.

மனிதர்கள் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக உழைத்துப் பகைவர்களின் விமானங்களைக் கண்டுபிடிக்க "ரேடார்" கருவி களைக் கண்டுபிடித்தனர்.

ஆனல் இயற்கையோ, குழிவிரியன்கள் ஒளிந்து பதுங்கி யிருக்கும் எலிகளைக் கண்டுபிடிக்க இக்குழிகளை அமைத்துத் தந்தது.

இக்குழிகளின் சிறப்பை 1936வரை எந்த விஞ்ஞானியும் கண்டுபிடிக்கவில்லை. 1937ஆம் ஆண்டுதான் நோபில் (Noble), ஷிமிட் (Schmidt) என்ற இரு பெரு வல்லுநர்கள் குழிவிரியன் களின் சிறப்பை ஆராய்ந்து வெளியிட்டனர். இவர்கள் ஆய்வை, பின்வந்த பேரறிஞர்களான டுவீடி-கிராம்ப்டன் போலெங்கர்-பார்க்கர்-டிட்மார்ஸ்-போப்-டெஸ்மான் மோரிஸ் ஆகியவர்கள் பல சோதனைகள் மூலம் உறுதிப்படுத்தினர். இனி இக்குழியின் அமைப்பு எப்படி வேலை செய்கிறதென்று காண்போம்.

இக்குழியின் பின்புறம் காற்றே இல்லாத ஒரு மெல்லிய பை உள்ளது. அந்தப் பை மிக நுண்ணிய உணர்வு நரம்பு

களால் இணைக்கப்பட்டு மூளைக்குச் செல்லும்படி அமைந்துள்ளது.

வெப்ப இரத்தமுடைய எலிகள் வளைகளில் ஒளிந்திருக்கும்போது அவைகளின் உடலிலிருந்து வெளிவிடப்படும் வெப்ப அலைகள் காற்றில் மிதந்து வந்து பாம்பின் இக்குழியினைத் தாக்கும்போது, குழியின் பின்புறமுள்ள சூனியப்பை விரிவடைகிறது. விரிவடையும்போது இணைக்கப்பட்ட நரம்புகள் மூளைக்கு வெப்ப உணர்வை அறிவிக்க மூளை உடனே எந்தத் திசையிலிருந்து இவ்வெப்ப அலைகள் வருகிறதெனப் பகுத்துப் பாம்பின் மற்ற அவையங்களை இயக்க, பாம்பானது குறி தவறுமல் வெப்ப அலை வரும் திசைக்குச் சென்று மறைந்துள்ள எலிகளைப் பிடித்து உண்ணும். இந்தச் செயல் வியப்பிலும் வியப்பல்லவா ?

**ஒலியுணர்தல்**

ஒலிகளைக் கேட்க நமக்குக் காது துணை செய்கிறது. ஆனால் காதுகளோ, காதுகளின் துவாரமோ இல்லாத பாம்பு எப்படி ஒலிகளைக் கேட்கிறது என்ற கேள்வியை நாம் எழுப்பவேண்டியுள்ளது. பாம்பாட்டியின் மகுடிக்கு முன் பாம்பு எப்படி ஆட முடிகிறது; என்ற பலமான கேள்வியைப் பலர் எழுப்ப முடியும். அறிவியல் ரீதிப்படிப் பார்த்தால் பாம்புகள் மகுடி இசையையோ மற்ற இசைக் கருவிகளையோ கேட்க முடியாது.

இரு ஆண்டுகளுக்கு முன் ஒரு ராணுவ அதிகாரியொருவர், தான் குழலூதும்போது பாம்பு தானே ஆடும் என்றார். நான் மறுத்துக் கூறியும் கேளாததால் இருவருக்கும் இடையே இந்தக் கூற்றை மறுத்தும், ஆதரித்தும் ஒரு குறிப்பிட்ட தொகை பந்தயப் பணமாக வைக்கப்பட்டது. எனது சோதனைக்காக ஆகும் செலவையும் அவரே ஏற்றார்.

பத்து அடி நீளமும் இரண்டு அடி அகலமுமுள்ள ஒரு மரப் பெட்டி தயார் செய்யப்பட்டு, இரு முனைகளும் கம்பி வலைக் கதவுகள் பொருத்தப்பட்டு, கருநாகப் பாம்பு ஒன்று உள்ளே அடைக்கப்பட்டது. ஒருமணி நேரங்கழித்துப் பாம்பு ஒரு மூலையில் அடங்கியது. முன் கதவை ஒட்டி ராணுவ அதிகாரி நின்று கொண்டு தன் குழலில் இனிமையான ராகம் ஒன்றை வாசித்தார். மகுடி ராகம் அடுத்தாற்போல் இசைக்கப்பட்டது, பாம்பு மூலையை விட்டு அசையவே இல்லை. அதன் பிறகு முன் கதவினையொட்டி ஐந்தடி நீளமுள்ள பலகை யொன்று பெட்டியில் படுமாறு வைக்கப்பட்டது. பலகையின் முனையில் ஒரு மண்

ணெண்ணெய்த் தகரத்தை வைத்து இலேசாக அந்த தகரத்தைத் தட்டியபோது தகரத்திற்கு 14 அடி தொலேவில் பெட்டிக்குள் படுத்திருந்த பாம்பு சீறிக் கொண்டு தலேயைத் தூக்கி நின்றது.

ராணுவ அதிகாரி தோல்வியை ஒப்பிப் பந்தயப் பணம் கொடுத்துப் பாராட்டிச் சென்ருர். ஏன் பாம்பு தகரத்தைத் தட்டியபோது தலேதூக்கியது என்று பார்க்க வேண்டுமல்லவா? பாம்புப் பெட்டியும், இணேக்கப்பட்ட பலகையும் தொட்டுக் கொண்டிருந்தன. தகரத்தைத் தட்டும்போது சத்தத்தின் அதிர்ச்சி அலேகள் பலகை மூலம் ஊடுருவி, பெட்டியின் பலகை வழியாக பாம்பின் உடலில் அடிப்பாகச் செதில்களேயும் ஊடுருவும் போது, அச்செதில்களுடன் இணேக்கப்பட்ட எண்ணற்ற உணர்வு நரம்புகள் இந்த ஒலியை உணர்ந்து பாம்பு இயங்குகிறது. பாம்பு இயக்கத்திற்கும் எதிரிகளிடமிருந்து பாம்பு தங்களேக் காப்பாற்றிக் கொள்ளுவதற்கும் இந்தச் செதில்கள் தான் துணே செய்கின்றன.

இதேபோல் பாம்பாட்டி விஷயத்தை நாம் பார்த்தால் உண்மை சில வெளிவரும்.

நாகத்தை வைத்துப் பிழைப்பு நடத்தும் பாம்பாட்டி பாம்பை இயக்குமுன் என்னென்ன செய்கிருன் என்பதைக் காண வேண்டும்.

முதலில் பாம்பாட்டி பாம்பை வைத்துள்ள மூடியுள்ள சிறு கூடையை அசைப்பதைக் காணலாம். அல்லது கூடையின் மேல் பாகத்தைத் தட்டுவதையும் காணலாம். அடுத்தாற்போல் மேல்மூடியை லேசாகத் திறந்து இடைவெளி வழியாகக் காற்றை ஊதுவான். அதன்பிறகே மேல்மூடியைத் திறந்ததும் பாம்பு சீறிக் கொண்டு கிளம்புகிறது. பாம்பு நிமிர்ந்து நிற்பதற்கும் பாம்பாட்டி மகுடியை ஊதுவதற்கும் சரியாக இருக்கும். பாம்பின் முகத்திற்கும் நேரே மகுடி மூலம் ஊதப்படும் காற்று படும்போது பாம்பு கோபமடைகிறது. மகுடியை எந்தத் திசையில் பாம்பாட்டி அசைக்கின்ருரோ அந்தத் திசையில் பாம்பு திரும்புகிறது. வேகமாக மகுடி அசையும்போது பாம்பும் வேகமாகத் தலேயை அசைக்கிறது. மகுடியை ஒரே இடத்தில் பிடித்து ஊதுவதை நிறுத்திஞல் பாம்பு உடனே தாக்க ஆரம்பிக்கிறது.

பாம்பு தன்னுடைய அடிப்பாக வென்ட்ரல் செதில்கள் மூலம் தான் சத்தத்தை உணருகிறது என்பதற்குச் சான்று, முதலில்

பாம்பாட்டி கூடையின் மேல்மூடியைத் தட்டும்போதும், அசைக்கும்போதும் அதிர்ச்சியின் மூலம் பாம்பு உணர்ந்து, பாம்பு தனக்கு ஆபத்து வரப்போகிறது என்று தயார் நிலையில் இருக்கிறது.

இரண்டாவது எந்தப் பாம்புக்கு முன் காற்று ஊதப்பட்டாலும் உடனே கோபமடைகிறது. இதனாலேயே தமிழகத்தில் ஒரு பழமொழி கூறப்படுவதை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். "ஆடிக் காற்றில் காலைப் பார்த்து நட" என்று கூறுவதிலிருந்து ஆடிக்காற்று வேகமாக அடிக்கின்றபோது நாகங்கள் சீறிக்கொண்டு நின்றால் அவ்வழி போகும் மனிதரின் கால் பாம்பினால் தாக்கப்படும் என்றுதான் இப்படி எழுதினார்கள் என எண்ணுகிறேன்.

**காதல் விளையாட்டு**

பாம்புக்குட்டி முட்டையிலிருந்து வெளிவந்து வளர்ந்து ஓராண்டில் பருவமடைகிறது. பாம்பு இனத்தின் காதல் விநோதமானது.

மனிதரில் காதல் செய்ய முதலில் தூண்டுகோலாக இருப்பது ஆண்மகன். ஆனால் பாம்பினத்தில் இக்காதல் விளையாட்டைத் துவக்குவது பெண்பாம்புதான்.

கலவி உணர்ச்சியால் தூண்டப்பெற்ற கன்னிப்பாம்பு ஆண் பாம்பிருக்கும் பக்கம் தன் ஆசன வாய் வழியாக ஒருவித மணமுடைய நுண் திரவத்தை வெளியிட்டுச் செல்லும். அம்மணத்தின் பொருள் தன்னை வந்து காதலிக்குமாறு ஆண் பாம்பிற்கு விடும் அழைப்பாகும்.

ஆண் பாம்பு அக்கன்னிப் பாம்பைத் தேடிப்போனபின் காதல் விளையாட்டு ஆரம்பமாகும். இரு பாம்புகளும் மனதார ஒன்றையொன்று விரும்பினாலொழிய கலவி நடைபெறாது. இத்துறையில் தனியாராய்ச்சி நடத்திய அறிஞர் ஹெர்பர்ட் வெண்ட் (Herbert Wendt) மிக அழகாக இன்னும் விரிவாக எழுதியுள்ளார்.

முக்கியமாக ஆண் பாம்புக்கு உள்ள ஆண்குறி இரண்டு என்பதைப் பாம்பாராய்ச்சியில் உள்ளவர் தவிர மற்றவர் அறிந்தால் வியப்பெய்துவர். கலவியின்போது ஒரு குறியைத்தான் பாம்பு உபயோகப்படுத்தும். கலவி ஒரு மணி முதல் இரண்டு மணி வரை நீடிக்கும்.

இதுபோன்ற எத்தனையோ விநோத பாம்புகள் பிறந்து ஒரு ஆண்டில் பருவமடைந்து விடுகின்றன. பருவமடைந்த

பாம்புகள், காதலிக்கும் கலையில் மனிதர்களைவிடச் சிறிது மாற்ற நிலைமையில் காதலிக்கின்றன. மனிதர்களில் ஆண்கள் பருவ நங்கைகளின் பார்வைக்காகக் காத்துக்கிடந்து காதலிக்கின்றனர். ஆனால் பாம்பு இனத்தில் இந்தக் காதற்கலையைப் பெண் பாம்பே துவக்கி வைக்கின்றது.

கருத்தரிப்புக்கு முன் ஏற்படும் கலவி நிகழ்ச்சி குறைந்தது ஒரு மணி முதல் இரண்டு மணி வரை நீடிக்கும். இந்தத் துறையில் தனி ஆராய்ச்சியில் ஈடுபட்ட ஹெர்பர்ட் வெண்ட் (Herbert Wendt) என்பார் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். விஷப் பாம்புகளில் ஒன்றை யொன்று தன்னுடைய விஷப் பல்லால் கடித்தால் இரண்டுமே இறந்துவிடும்.

இக் கலவியின்போது சாதாரணமாகக் கலவி நிகழ்ச்சியில் ஆண் பாம்பு பெண் பாம்பைவிட வேகம் குறைந்துதான் காணப்படும்.

பாம்புகளுக்கு இமைக்கும் கண் இமைகள் கிடையாது. மெல்லிய சவ்வு போன்ற உறுப்பினால் கண்கள் மூடப்பட்டு இருக்கும். இதனால் பாம்பு விழித்துக் கொண்டிருக்கிறதா அல்லது தூங்குகிறதாவென யாரும் கண்டுகொள்ள முடியாது. இந்த இமையா நாட்டப் பார்வையே பாம்பைப் பலர் ஐயத்தோடு பார்க்கவும், அவைகளைக் கொல்லவும் துணையாயமைந்து விடுகிறது.

இதுபோன்ற பலப்பல விநோத குணங்களையும், செயல் களையும் பாம்பு இனம் கொண்டிருக்கிறது. மற்ற சில சிறப்பான விநோத குணங்களைப் பற்றி விளக்கமாகப் பின் பகுதிகளில் எழுதியிருக்கிறேன்.

# 5

# பாம்புக் கடவுள்கள்

அரிய செயலைச் செய்த மனிதர்கள் வழிபாட்டுக்குரிய வழிபடும் தெய்வமாக ஆக்கப்பட்டுள்ளனர். இந்த வகையில் இராமகிருஷ்ணர், இராமலிங்கர், அண்ணல் காந்தியடிகள், அறிஞர் அண்ணு போன்ருேர் குறிப்பிடத் தக்கவர்கள்.

பாம்புகள் அரிய செயலைச் செய்யும் சக்தி உடையனவா? பாம்புகளிடம் விலைமதிப் பற்ற அரிய சக்திகள் அடங்கி யிருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்த அரும் சக்தியை வைத்துத்தானே என்னவோ சரித்திர காலத்திற்கு முன்னும் இன்று வரையும்கூட பாம்புகளைக் கடவுளாக எண்ணி வழி பட்டு வந்துள்ளனர். உலகிலுள்ள நாடுகளில் பெரும்பகுதி பாம்பு வழிபாடு உடையனவாகத் திகழ்ந்தன.

பாம்பு நூல் வல்லாரும், பாம்பு வழிபாடுபற்றி ஆய்வு நடத்திய பல அறிஞர்களும் சில வியத்தகு விவரங்களைத் தங்கள் நூல்களில் விவரித்துள்ளனர். ரமோனு, டாக்டர் டெஸ்மாண்ட் மோரிஸ் என்பவர்கள் தம்முடைய 'மனிதர்களும் பாம்புகளும்' என்ற நூலில் மிக அழகான முறையில் விவரித் துள்ளார்கள்.

மேற்கு ஆப்பிரிக்காவினைக் கண்டுபிடித்துக் காங்கோ நாட்டில நுழைந்தவர்கள் பாம்பு வழிபாடு சிறப்புற்றிருந்ததைக் கண்டுள் ளனர். ஆப்பிரிக்கர்கள் பைதன் (Python) என்ற பெரும் மலைப் பாம்புகளையே வணங்கினர். குறிப்பாக நீக்ரோக்கள் மலைப் பாம்பு வழிபாட்டில் சிறப்பாக ஈடுபட்டிருந்தனர்.

டஹோமி, நைஜீரியா போன்ற நாடுகளிலுள்ளவர்கள் மக்களைவிடப் பாம்புகளுக்கு அதிகம் மதிப்புக் கொடுத்தனர்.

ஒரு டஹோமன் நாட்டுக் குடிமகன் மலைப்பாம்பினைக் கண்டால், பூமியில் படுத்து வணக்கம் செலுத்துவான். பாம்பினைக் கண்டபோது அதைக் கடவுள் என்றும், தாய் என்றும், எசமானன் என்றும் மரியாதை செய்து வணங்கியிருக்கிறார்கள். பாம்புகள் வாழ அழகிய சிறு குடில்களையும் அமைத்துக் கொடுத்துள்ளார்கள்.

1700ஆம் ஆண்டில் வாழ்ந்த போஸ்மாரா (Bosmara) என்பவர் பாம்புக் கடவுளுக்கு டஹோமி மக்கள் டான் பி வைதா (Danh-Gbi-Waydah) என்று பெயரிட்டனர் என்றும், அந்நாட்டு அரசன் தனது பரிவாரங்கள், தலைமை மதக்குருக்கள் புடைசூழப் பாம்பு வாழும் குடிலுக்குச் சென்று மரியாதையோடு வணங்கி, தனது அரசாங்க நிருவாகச் சிக்கல்களுக்குத் தீர்வையும் தருமாறு வேண்டினான் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

"டான் பி" பாம்புத் தெய்வ வழிபாட்டில் பெண்களே அதிகம் ஈடுபாடு கொண்டனர். பெரும் மலைப்பாம்புகள் இளம் பெண்களின் கனவில் தோன்றினால் அவர்கள் பாம்புத் தெய்வ கோவிலுக்கு நிரந்தரமாகப் பணிவிடை செய்யத் தங்களை அர்ப்பணித்துக்கொள்ள வேண்டுமாம். இப்படிப்பட்ட பெண்கள் மட்டும்தான் பாம்புக்கோவில் பூசாரிகள் மழை வேண்டி ஆடும் தெய்வ ஆட்டச் சடங்கில் கலந்துகொள்ள அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

இன்னொரு வேடிக்கையான பழக்கமும் டஹோமி மக்களிடம் இருந்திருக்கிறது. மலைப்பாம்புகளுக்கு மனைவிகளைக் கூட்டிவைக்கும் ஒரு வழக்கம் இருந்தது. கோவிலிலுள்ள பூசாரிணிகள் திடீரென ஆவேசம் வரும் சமயம் கிராமத்திற்குள் ஓடிப் பன்னிரெண்டு வயது முதல் பதினெட்டு வயது வரையுள்ள பெண்களை இழுத்து வந்து பாம்புக் கடவுளுக்கு மனைவிகளாக ஆக்கிவிடுவார்கள். மிகுந்த பக்தியுள்ள பெற்றோர் தங்களின் அழகிய பெண்களைத் தெருவில் வலிய அலைய விடுவதும் வழக்கம். இப்படி அலையும் தங்கள் பெண்கள் பாம்புக் கடவுளுக்கு மனைவியாக ஆக்கப்பட்டால் தங்கள் குடும்பத்தில் வளங்கொழிக்கும் என்று நம்பினார்கள். பாம்புக் கடவுளின் மனித இன மனைவிகள் பூசாரிகளின் சில சடங்கு, விதிமுறைகளை அறிந்து அதன் பிறகு பெரும் சடங்குகளில் பூசாரிகளோடு முரட்டு ஆட்டங்கள் ஆட அனுமதிக்கப்படுவர்.

இப்படிச் செய்வதால் விளைச்சல் அதிகமாகும் என்பது இவர்கள் கருத்து. பயிர்கள் முதிருங்காலத்தில் இப் பெண்கள்

உயிர்ப் பாம்புத் தெய்வத்தை வழிபட வரும் பக்தகோடிகளுக்கு உடல் விருந்தளித்து மகிழ்விக்க வேண்டும். இது இழிவான செயல் என்றாலும் நாட்டின் வளப்பம், சமுதாய வளர்ச்சி இவைகளை ஊக்குவிக்கும் பாம்புக் கடவுள் இப் பெண்களின் நடவடிக்கைகளுக்குப் பொறுப்பாகையால் இது ஒரு புனிதத் தொழிலாகக் கருதப்பட்டது. இப் பெண்கள் மனிதரை மணம் செய்ய அனுமதிக்கப்படுவதில்லை. ஆனால் மற்ற பக்தர்களோடு கூடி இப் பெண்களுக்குக் குழந்தை பிறந்தால் அக்குழந்தை பாம்புத் தெய்வத்திற்குச் சொந்தமாகிவிடும்.

மலைப்பாம்பினை யாராவது துன்புறுத்தினாலோ, கொன்றாலோ கொன்றவர்களை நெருப்பிலே உயிரோடு தள்ளிக் கொன்று விடுவார்கள். தற்காலத்தில் கூட இப்பழக்கம் இருக்கிறது என்றாலும் பணத்தின் செல்வாக்கைக் கொண்டு மதக்குருக் களிடம் லஞ்சம் கொடுத்து இக் கொடும் தண்டனையிலிருந்து தப்பிவிடுபவரும் உண்டு.

19ஆம் நூற்றாண்டில் கூட இப் பழக்கம் இருந்தது. வில்பிரட் ஹாம்பிளி (Wilfred Hamply) 1857-58இல் கூட இது போன்று ஆப்பிரிக்க பூசாரிகளும், பூசாரிணிகளும் நிர்வாணமாக பாம்பு வணக்கத்திற்கான ஊர்வலம் நடத்துவது வழக்கம் என்று குறிப்பிட்டுள்ளார். இது போன்ற ஊர்வலங்கள் நடை பெறும்போது எந்த மிருகங்களும் வீதிகளில் நடமாட அனுமதிக்கப்படுவதில்லை. பூசாரிகள் பங்குகொள்ளும் வழி பாட்டு ஊர்வலத்தை யாரும் பார்க்க அனுமதிப்பதில்லை. அப்படி பார்ப்பவர் கடுநோய்க்கு ஆளாகி இறந்துபடுவார்கள் என்பது நம்பிக்கை. இதுபோது ஊர்வலங்களைக் காண முயன்ற வெள்ளையர் பலரை ஆப்பிரிக்கர்கள் விஷமிட்டுக் கொன்றிருக்கின்றனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் எடுத்த கணக்கின்படி தீவிர பாம்பு வழிபடுவோர் தொகை அதிகம் என்று கணக்கிடப் பட்டுள்ளது. இப்படி வணக்கத்தில் ஈடுபடாதவரில் பாம்பின் தெய்வத்தன்மையைக் கருதி பாம்பினை அடிக்காமல் விட்டு விடுபவர் பலருண்டு. இந்தோனேஷியா, சைனா ஆகியவைகளில் மரம், செடி, கொடிகளுக்கு உள்ள ஆவி பாம்பு ரூபத்தில் உள்ளதாகவும், இந்த ஆவி வளப்பத்திற்கு வழிவிடும் என்றும் கருதினார்கள்.

முற்கால ஜப்பானில் இடிக்கு அரசனாக பாம்பையே வைத்தார்கள். வளப்பக் கடவுளான சுசானோ (Susano).வை

பாம்போடு இணைத்தே கூறினார்கள். நாகசாகியில் உள்ள வெள்ளைக் கடல் பாம்புகளைக் கடவுளின் அவதாரம் என்றே கருதினார்கள்.

முற்கால சீன சக்கரவர்த்திகள் கூடக் கடல் நாகத்தின் பரம்பரை என்றே அழைக்கப்பட்டனர். இருபதாம் நூற்றாண்டில் கூட சீன மக்கள் இந்தக் கடல் பறவை நாகச்சின்னத்திற்குப் பெரும் மதிப்புக் கொடுப்பதைக் காணலாம்.

வட அமெரிக்காவின் இந்தியர்கள் பாம்புகளை மழை, மின்னல், இடி போன்றவற்றிற்குச் சான்றாகக் காட்டினர்.

எச். டபிள்யூ. பார்க்கர் (H. W. Parker) என்பார் அவருடைய 'பாம்புகள்' என்ற நூலில் அரிசானோ நாட்டின் வட கிழக்கில் வதியும் ஹோபி இந்தியர்களிடம் இந்தப் பழக்கம் இருந்தது என்று குறிப்பிட்டுள்ளார். இவர்கள் ஆடும் மழை நடன ஆட்டத்தில் பூசாரிகள் பாம்புகளை மழைத் தெய்வத்திற்குத் தூதனுப்புவதாகக் கருதி அனுப்புவார்கள்.

பாபிலோனியர்கள் பூமியின் வளமையைப் பாம்பாக உருவகப் படுத்தி வணங்கினர்.

நாகரிகத்திற்கே தொன்மை வாய்ந்தவர் என்று கருதுபவர் களில் கிரேக்கர்களும், ரோமானியர்களும் பாம்புகளைப் புனிதக் கடவுளாகக் கொண்டனர். 20ஆம் நூற்றாண்டான இன்றும் பாம்புப் புற்றிற்கு பால் வார்க்கும் பழக்கம் கிரேக்கர்களிடம் உண்டு.

கிரேக்கர்கள் பாம்புகளைத் தங்கள் குடும்பங்களைக் காக்கும் கடவுளாக மட்டுமல்லாது செடி கொடிகளைக் காக்கும் கடவுளாகவும் கொண்டனர். ஆதீன் (Athene) என்ற ஆதென்ஸ் நகரத் தேவதைக் கடவுள் அந்நகரைக் காக்கும் கடவுளாக வைக்கப்பட்டு அந்நகரின் தேசியச் சின்னமே பாம்புச் சின்னத் தைக் கொண்டிருந்தது.

மக்கள் பாம்பின் மேல் கொண்ட அளப்பரிய பக்திக்கு ஒரு சிறு நிகழ்ச்சியை Ramona & Desmond Morris என்பார் விவரித் துள்ளார். பர்ஸியர்கள் ஆதென்ஸ் நகரைத் தாக்கிய ஒரு சமயம் அந்த நாட்டில் வதியும் புனிதப் பாம்பு அதற்குப் படைக்கப்பட்ட தேனையும் உணவையும் உண்ண மறுத்ததைப் பூசாரிகள் மக்களிடம் கூற, இதனால் பீதியடைந்த மக்கள் அந்த நகரை விட்டே வெளியேறியதாகக் கூறப்பட்டுள்ளது.

ஹட்சின்ஸன் (Hutchinsun) என்பார் சர். ஜான் போர்ஸ்டைக் என்பார் நினைவுக் குறிப்புகளிலிருந்து முதல் உலக மஹா யுத்தத்தின் போது நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைக் கூறியுள்ளார். மாஸிடோனியா நகரத்திலுள்ள காலினேவா என்ற இடத்தி லிருந்த மக்கள் வெளியேறிய போது சக்தி வாய்ந்த வீட்டுப் பாம்பு ஒன்று மட்டும் வெளியேற மறுத்துவிட்டதாகவும், அக் கிராமத்தைக் கைப்பற்றிய வெள்ளையர்கள் இதையறிந்து அப் பாம்பிற்கு தங்கள் படைப்பிரிவிலிருந்து உணவு முதலியவை களைத் தொடராக அனுப்பப்பட்டதாகவும் எழுதியுள்ளார்.

இவ்வாறு உலகில் அதிகமாகப் பாம்பு வணக்கத்திற்கு பேர் போன ஆப்பிரிக்க நாட்டை முதலாவதாகவும். அடுத்ததாக இந்திய நாட்டையும் குறிப்பிட்டுள்ளனர்.

கலை, கலாச்சாரம், மதம் ஆகியவைகளோடு பெரும் சிறப்பைப் பெற்ற இந்திய நாடு பாம்பு வணக்கத்திலும் சிறப்புற்று விளங்கியது.

1905இல் சி. எப். ஓல்ட்மேன் (C. F. Oldman) என்பவர் பிராமணர்கள் கண்டுபிடித்த ஆயிரக்கணக்கான கடவுளர்களை விட, பாம்பினையே தங்களைக் காக்கும் கடவுளாகக் கருதி வணங்கியதைக் குறிப்பிட்டுள்ளார். பஞ்ச காலத்திலும், மழையைத் தருவிக்கும் சமயத்திலும் பாம்புக் கடவுளே தலை சிறந்ததாக வணங்கப்பட்டது.

இன்று கடவுளர்களாகத் திகழும் சிவன் கழுத்திலே பாம்பு, வைணவர்கள் வழிபடும் விஷ்ணுவுக்குப் படுக்கை பாம்பு, யானை முகனுக்கும் ஒரு பாம்பு, காளிக்கும் கையிலே பாம்பு—இப்படி கடவுளர்களோடு பாம்புகளையும் இந்திய மக்கள் இணைத்திருந் தனர்—வழிபட்டனர்.

இன்று கூட நாகபஞ்சமி என்ற நாளை நாகத்தை வணங்கும் திருவிழாவாக இந்திய நாடு முழுதும் கொண்டாடுவதைக் காணலாம். தமிழகத்தில் இன்றும் மக்கள் தங்கள் குடும்பத்தில் நாகப்பன்—நாகம்மை—நாகராசன் என்ற பெயரை இட்டு வழங்குவது நாக வழிபாட்டிற்கு எடுத்துக்காட்டாக அமைந் துள்ளது.

ஒரு மரப் பொந்திலே நாகப்பாம்பு குடி புகுந்து வாழ ஆரம் பித்தால் அந்த மரம் பல ஆண்டு காலம் பட்டுப் போகாமல் வாழும் வாழ்வை பாம்பு அளிப்பதாகக் கருதப்பட்டு வந்தது. பெரும் பாலும் நாகக் கடவுள்களின் சிலை மரங்களுக்கு அடியில் அமைத்து

வழிபடுவதும் மேற் கூறிய கூற்றுக்குச் சான்றாகும். இன்றும் கிராமப் புறங்களில் காய்கறித் தோட்டம் பயிரிட்டு விளையும் முதல் காய்களையும் கறிகளையும், அதோடு மாடு முதல் கன்று ஈந்தால் அந்தப் பாலையும் நாகக் கடவுளுக்குப் படைத்து விட்டுத் தான் குடும்பத்தினர் உண்பர், இப் பழக்கத்தை இன்றும் காணலாம்.

தவறுதலாக நாகப்பாம்பு அடிக்கப்பட்டு இறந்தால் அப் பாம்பை அரிசி தூவி, மலர் தூவி, பாலூற்றி மக்கள் புதைக் கும் பழக்கம் தொன்று தொட்டு வந்ததாகும்.

1976ஆம் ஆண்டு சூன் திங்கள் நான் அதிகார பூர்வ பயண மேற் கொண்டு லண்டனிலிருந்து தமிழகம் வந்தேன். மூன்றரை வயதுள்ள எனது மகன் செல்வகுமாரும் உடன் வந்தான். எனது ஒன்று விட்ட அண்ணன் திரு. நடராசன் அவர்களின் மகள் குமாரி, கௌரி பி.எஸ்.ஸி. பி.இடி. அவர்களோடு படித்து தற்போது அண்ணா நகரில் வதியும் திருமதி. வனஜோதி சுந்தர ராசன் தம்பதிகளின் விருந்தினராக ஒரு சில நாட்கள் நாங்கள் தங்கியிருந்தோம்.

திருமதி. வனஜோதி மிகவும் கலகலப்பாகப் பேசுபவர். எம். ஏ. பட்டம் பெற்றவர். அவருடைய கணவர் சுந்தர ராசன் அவர்கள் தங்கள் வீட்டிற்கு வந்த ஒரு நாகப் பாம்பின் குட்டியைத் தான் அடித்துக் கொன்றபோது அவருடைய மாமி அவர்கள் கொஞ்சம் செம்மண் எடுத்துக் குழைத்து படத்திற்கு முன்பு வைத்து நாக வழிபாடு நடத்தியதைக் குறிப்பிட்டார். இதன் முக்கியத்துவம்பற்றி நான் கேட்டபோது திருமதி. வனஜோதி அடியிற் கண்ட தகவலைத் தந்தார்.

கோயம்புத்தூரில் வதியும் நாயுடு குடும்பங்களில் "காக்க வல்லார்" என்ற குடும்பம் தன்னுடைய குடும்பம் என்பதை விளக்கி இக்காக்கவல்லார் பரம்பரையில் எத்தனையோ தலை முறைகளாக நிகழும் நாகவழிபாடு தலை சிறந்தது என்றும் குறிப்பிட்டார். இக் குடும்பங்களில் மட்டுமல்ல நாயுடு குடும் பங்களில் "ரேணுகா" என்ற பெயரைத் தங்களுடைய பெண் குழந்தைகளுக்கு இடும் பழக்கமுண்டு. "ரேணுகா" என்பது நாகக் கடவுளுக்குள்ள பெயராகும்.

குடும்பத்திலுள்ள வயது முதிர்ந்த பெரியோர் பல நாட்கள் தூய விரதமிருந்து கடைசிநாள் பாம்பு குடியிருக்கும் புற்றில் கைவிட்டு புற்றுக்குள் இருக்கும் செம்மண் ஒரு பிடி எடுத்து பயபக்தியோடு வீடு கொண்டு வந்து குழைத்துத் தங்கத் தகட்டின்

மேல் வைத்து பலவித சடங்குகள் பூசைகள் செய்து நாகவழிபாடு நடத்துவார்களாம். எத்தனையோ ஆண்டுகளுக்கு தெய்வ உருக் கொடுத்த இம்மண் வழிபடப்படுமாம். இதன் மூலம் தங்கள் குடும்பம் வளவாழ்வு பெற்று, நாகபரம்பரையால் தங்கள் குடும்பத்திற்கு எவ்வித ஊறும் நேரா வண்ணம் காக்கும் என்ற நம்பிக்கை இவ்வழிபாட்டு மூலம் உறுதிப்படுத்தப் பட்டுள்ளது.

இன்னும் கோயம்புத்தூரிலுள்ள வாழைத் தோட்டத்து ஐயன் கோவில் என்ற இடம் நாகவழி பாட்டிற்குச் சிறந்த இட மாகக் கருதப்படுவதாகவும் தை முதல் நாள் இவ்வழிபாடு சிறப்பாகக் கொண்டாடப்படுவதாகவும் அறிகிறேன்.

ஆப்பிரிக்க, ஐரோப்பிய நாடுகளில் மலைப்பாம்பைத்தான் தெய்வ வழி பாட்டுக்கு உரித்தாக்கினர். ஆனால் இந்திய நாட்டில் கொடிய விடம் தாங்கிய நாகத்தை வழிபட்டு வரு கிறார்கள். இது இந்திய மக்களுக்குள்ள தனிச்சிறப்பு. இந்திய நாடு பல படை எடுப்புக்களைக் கண்டது. வரநெஞ்சம், வஞ்ச கம், நாடு பிடிக்கும் ஆசை, மதப் போராட்டம் இவைகளை உள்ளடக்கிய இப்போராட்டங்களில் எதிரிகளாக இருந்து கொடுமை பல செய்து நம் நாட்டில் காலூன்றிய மாற்று இனத்தை அவர்களும் மனிதர்கள் என்ற முறையில் மதித்து அவர்களோடு அமைதியாக வாழ்ந்திட்ட இந்திய நாட்டினர் நாகத்தைத் தெய்வமாக வழிபடுவதில் வியப்பில்லை என்று கருதுகிறேன்.

6

# பண்டைய வைத்தியதுறையில் பாம்புகள்

மனிதனின் வரலாறு எத்துணைப் பழைமை வாய்ந்ததோ அத்துணைப் பழைமை வாய்ந்தது பாம்புகளின் வரலாறும். புதிய மருந்துகள் எவ்வளவுக் கெவ்வளவு கண்டு பிடிக்கப்பட்டு வருகிறதோ, அதைவிடப் பன்மடங்கு புதிய வியாதிகளும், அவ் வியாதிகளுக்குக் கிளை வியாதிகளும் தோன்றிய வண்ணம் இருக்கின்றன. தற்காலத்தில் கணக்கெடுத்துப் பார்த்தால் மக்கள் தொகையில் பாதி விகிதாசாரமாவது நோயின் எண்ணிக்கை இருக்கும் என எண்ணுகிறேன்.

பழமையில் பாம்பு, வைத்தியத் துறையில் தனிச் சிறப்பைப் பெற்றிருந்ததை இந்நூலில் குறிப்பிடுவது மிக அவசியமென எண்ணுகிறேன். பழங்கால வைத்திய வல்லுநர்கள் பாம்பையே அருமருந்தாக வைத்தியத்திற்கு உபயோகப்படுத்தி வந்துள்ளார்கள்.

தற்காலத்தில் வைத்தியத்துறையின் அடையாளச் சின்னமே பாம்பு உருவமாகக் கொண்டிருப்பதிலிருந்து பாம்பின் சக்தியை நாம் ஊகித்துக் கொள்ள முடியும்.

பாம்பின் உடலிலுள்ள அருந்திரவங்கள் அனைத்தும் அரு மருந்தாகப் பழங்காலத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்தத் திரவங்கள் மக்களின் நீண்ட ஆயுளுக்கும், உடலிலுள்ள பிணிகளைப் போக்கவும், சாகப்போகும் நிலையிலுள்ளவர்களைக்கூட பிழைக்க வைக்கவும், விஷத்தினை முறிக்கவும் பயன்பட்டது.

கருத்தரிப்புக்கும் பாம்பின் திரவம் பயன்பட்டது. பாம்புகளை வணங்குவதால் கருத்தரிக்கும் என்ற ஒரு நம்பிக்கையும் பழங்

காலத்திலிருந்தது. அதோடு பாம்பு எந்த மரப் பொந்தில் வசிக்கிறதோ அம்மரத்திற்கு நீண்ட ஆயுள் என்று கருதினர்கள். இந்த எண்ணத்தை வைத்துத்தான் தமிழகத்தின் மூலைமுடுக்கு களிலும், இந்திய நாட்டின் மற்ற பிரதேசங்களிலும் அரச மரத்தையும், அதன் அடியிலுமுள்ள பாம்புச் சிற்பத்தையும் குழந்தையில்லாதவர்கள் சுற்றிச் சுற்றி வருவதும் பழக்கம் உள்ளது சக்தியினலேயே என்று எண்ணுகிறேன்.

பாம்பின் தோல் பழங்காலத்தில் பல வியாதிகளுக்குப் பயன்படுத்தப்பட்டது. நரம்பு நோய், இசிவு நோய், சுளுக்கு களுக்கும் பாம்புத் தோலை அணிவித்துப் பழங்காலத்தில் குணப் படுத்தினர். ஒயின் என்ற திரவத்தில் பாம்புத் தோலை சுட்டுக் காய்ச்சிக் குளிரவைத்துக் காதில் விட காதுவலி நீங்கும் என்றும் அறிவித்துள்ளனர்.

முதல் நூற்றுண்டில் வாழ்ந்த பிளினி என்ற எழுத்தாளர் பேறு சமயத்தில் பாம்புத் தோலை இடுப்பில் அணிவதால் சுகப் பிரசவத்திற்கு உறுதுணையாக இருந்தது என்று குறிப்பிட் டுள்ளார்.

மார்க்கோ போலோ இந்தியாவைப்பற்றி குறிப்பிட்டிருப்பதில் பாம்பின் பித்த நீர்ப்பை அதிக விலைக்கு விற்கப்பட்டதாக அறிகிறோம். இந்தப் பித்த நீர்ப்பையைச் சிறிது எடுத்து நசுக்கி பிரசவ சமயத்தில் கொடுத்தால் பிரசவம் சுகமானதாக அமையும் என்று கருதியதால் அதிக விலைக்கு இந்தப் பித்த நீர்ப்பைகள் விற்கப்பட்டன.

வடஅமெரிக்க இந்தியரிடம் காணப்பட்ட ஒரு வேடிக்கை யான நம்பிக்கை இங்குக் குறிப்பிடத்தக்கது. அமெரிக்காவிலுள்ள ராட்டில் (Rattle Snake) பாம்பு நகர்ந்துவரும்போது வால் பாகத்திலுள்ள ராட்டில் என்ற உறுப்பிலிருந்து சத்தம் வரும். இந்த ராட்டில் பாம்பினைக் கொன்று காயவைத்துப் பொடி யாக்கிப் பிரசவ வேதனைப்படும் பெண்களுக்குக் கொடுக்கும் போது, வயிற்றிலுள்ள குழந்தை ராட்டில் சத்தத்தைக் கேட்டு கருப்பையிலிருந்து உடனே வெளியேறிவிடும் என்று நம்பிக்கைக் கொண்டிருந்தார்கள்.

கிறிஸ்துவுக்கு முன்பிருந்த மருத்துவர்களுக்குத் தந்தை என்று பெயர் பெற்ற ஹிப்போ கிரேட்ஸ் என்பார் கருத் தரிப்புக்குப் பாம்பின் கொழுப்பு. மற்றும் சில தாவரங்களி லிருந்து கூட்டாகத் தயாரிக்கும் ஒருவித மாத்திரையைச் சாப்பிடலாம் என்று குறிப்பிட்டுள்ளார்.

இதுபோன்று பாம்பிலிருந்து தயாரிக்கப்படும் மருந்துகள் அம்மை, காலரா, பிளேக் போன்ற கொடுநோய்க்கும் பயன் படுத்தப்பட்டன. 1665இல் லண்டனில் ஏற்பட்ட பிளேக் நோயின் அழிவிலிருந்து மக்களைக் காப்பாற்ற இந்தப் பாம்பின் மருந்தே மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டது.

தொழுநோய்க்கும் இந்தப் பாம்பு மருந்து பயன்படுத்தப் பட்டது. அவிகான் (Avican) என்ற அரேபிய வைத்தியர் கரு நாகத்தின் தோலை உரித்துப் பூமியில் புதைத்து, உரிக்கப்பட்ட தசையில் புழுக்கள் புழுக்க ஆரம்பித்த சமயம் தசையை வெளியே எடுத்துப் புழுக்களை உதறிவிட்டுத் தசையைக் காய வைத்துப் பொடியாக்கித் தொழுநோயைக் குணப்படுத்தி யுள்ளனர்.

பிரபல அறுவை நிபுணரும் மூலிகை நிபுணருமான, சர். ஜோசப் பெயரர் (Sir. Joseph Fayrer) என்பார் கல்கத்தாவில் இருந்த கபிராஜ் என்ற பெரு வைத்தியரின் ஆராய்ச்சியைப் பற்றி வியந்து பாராட்டியுள்ளார்.

ஒரு பெரிய மண்பாண்டத்தை எடுத்து, அதனுள் சில வாழை இலைகளைப் போட்டு, இரண்டு நாகப் பாம்புகளையும் பானைக்குள் இட்டு மூடி, பிறகு அப்பானையை நெருப்பினால் சூடாக்கவே, சூடு தாங்காத நாகங்கள் உள்ளே இருக்கும் வாழை இலையைக் கொத்தும். உடனே பானையைச் சூடு காண்பிப்பதிலிருந்து நிறுத்தி, வாழை இலையை வெளியே எடுத்து சோதித்தால் பாம்பின் விஷம் பாய்ச்சப்பட்ட இலையின் பாகங்கள் கருமை படர்ந்திருக்கும். அந்தப் பகுதியை மட்டும் வெட்டி எடுத்து, எரித்துப் பொடியாக்கி மற்றும் சில மிருகங்களின் பித்தப்பை, கணையப்பை முதலியவைகளையும், காய்கறிச் சத்துக்களையும் சேர்த்துப் பொடி செய்து துல்லிய தூளாக்கித் தயாரிக்கப்பட்ட மருந்து காலராவுக்கும் இருதயத் துடிப்பை ஊக்குவித்து ரத்த ஓட்டத்தை வேகமாக்கவும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

வாழை மட்டைகளுக்குத் 'தனிச்சக்தியும் உண்டு என்பதை நல்லப்பாம்பு கடிக்கு மருந்து என்று திரு. கி. ஆ. பெ. விசுவ நாதம் அவர்கள் "தமிழ் மருந்துகள்" என்ற சிறு நூலில் குறிப்பிட்டுள்ளார்.

தொழுநோய் கொண்ட ஒரு நபர் நாகத்தினால் கடிபட்ட போது இறப்பதற்குப் பதில், ஆச்சரியகரமாக தொழுநோய் வியாதியிலிருந்து குணம் பெற்று விட்டார்.

ஓரியண்டல் இன்ஷியூரன்ஸ் நிறுவன சிங்கப்பூர் கிளையில் துணை நிருவாகியாகப் பணிபுரியும் எனது நண்பர் திரு மு. இராமச்சந்திரன் அவர்கள் பாம்புகளைப்பற்றி மிக அக்கரையுடனும், ஆவலுடனும் என்னிடம் சில விஷயங்களை விவாதிப்பார். அவர் இந்திய நாட்டில் நடந்த ஒரு குஷ்டரோகி குணம் பெற்றதாகக் கூறப்பட்ட நிகழ்ச்சியைக் கூறினர்.

வைத்தியர்கள் குஷ்டரோகியின் வியாதியைக் குணப்படுத்தாது கைவிட்ட சமயம் மனம் உடைந்து ஒரு கரும்புத் தோட்டம் வழியாகத் தற்கொலை செய்து கொள்ள முடிவு செய்து வந்தபோது ஒரு நாகப் பாம்பு சீறிக் கொண்டு நகர்ந்தது. தாகமேலீட்டால் அப் பாம்பு இருந்து சென்ற பகுதியிலுள்ள கருப்பங்கழியை உடைத்துத் தின்று வீடு வந்த சமயம் சில நாளில் குஷ்டரோகம் நீங்கிவிட்டது. மருத்துவர்கள் இதையறிந்து அந்தக் குஷ்டரோகி எதைத் சாப்பிட்டார் என்று சோதனையிட்டபோது கரும்பில் நாகத்தின் விஷம் ஏறியிருந்ததைக் கண்டு பிடித்துப் பிறகு நாகத்தின் விஷமும் குஷ்டரோகத்தைக் குணப் படுத்தும் என்று உறுதிப்படுத்தினர். நண்பர் சந்திரன் அவர்கள் கூற்றையும் மேற் கூறிய மற்றொரு தொழுநோய்க்காரர் குணம் பெற்ற நிகழ்ச்சியையும் எண்ணி வியந்தேன்.

டாப்செல் (Topsell) என்ற எழுத்தாளர் பாம்பின் ரத்தத்தை முகத்தில் பூசி சில மணி நேரம் வைத்திருந்து கழுவினல் முகத்திலுள்ள பருக்கள் குறைந்து முகத்தில் பளபளப்பும் அழகும் மிளிரும் என்று குறிப்பிட்டுள்ளார்.

விரியன் பாம்பு போன்றவைகளின் தசைகளைத் தற்காலத்திலும் இத்தாலிய நாட்டிலுள்ள பெண்கள் தங்கள் உணவோடு சேர்த்துச் சமைத்து உண்ணுவதால், தோலில் பளபளப்புப் பெற்று, உடலிலுள்ள துர்நாற்றத்தையும் போக்கிக் கொள்ளுகிறார்கள்.

1862இல் டாகடர் ஹேஸ்டிங்ஸ் (Dr. Hastings) என்பார் போஆ (Boa) போன்ற பெரும் மலை வாழ் பாம்புகளின் மலத்தைக் காயவைத்து சிலர் ஆஸ்த்துமா, கக்குவான், தோல் நோய், வாத நோய், மூச்சுத் திணறல் ஆகியவற்றுக்குப் பயன் படுத்தியதாகக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழகத்தில் புருவின் காய்ந்த மலத்தை எடுத்துச் சூடாக்கி ஒத்தடம் கொடுக்கும் பழக்கத்தையும், டாக்டர் ஹேஸ்டிங்ஸின் விளக்கத்தையும் குறிப்பிடும்போது சில மிருகங்களின் மலம்

எவ்வளவு பயன்படுகிறது என்று நாம் அறியமுடியும். டாக்டர் ஹேஸ்டிங்ஸ் இதை நேரிடையாகவே பார்த்து எழுதியுள்ளார். மெக்ஸிகோ நகரத்தில் உள்ள நாஹுவாட் (Na-Hualt) மலைச் சாதியினர் நீண்ட கூந்தலுக்குப் பெயர் போனவர்கள். பாம்பு களின் கொழுப்பில் தயாரிக்கும் ஒருவித எண்ணெயை அவர்கள் தலைக்கு உபயோகிப்பதால் இது போன்று கூந்தல் வளர்கிறது என்று குறிப்பிடுகிறார்கள்.

சீனர்கள் "போஆ" பாம்பின் கறியை இருதய நோய்க்கும், கடற் பாம்புகளை மற்றும் பல வியாதிகளுக்கும் உபயோகப் படுத்துகின்றனர்.

அண்மையில் நான் நண்பர் சந்திரன் அவர்களோடு ஒரு சீன வைத்தியரைக் காணச் சென்றேன். சிங்கப்பூரில் ஒரு மூலைப் பகுதியில் வாழும் அவ்வைத்தியர் கொன்ற கட்டு விரியன் சில வற்றையும், சில இலைகளையும் ஒரு பெரும் கண்ணாடிப் புட்டியில் இட்டு மருந்தாக வைத்திருந்தார். அந்த மருந்தை எதற்குக் கொடுக்கிறார் என்று வினவிய போது, இதனால் சுகமான பிரசவத் திற்கும், சன்னி கண்ட நிலையிலிருந்து உயிரைக் காப்பாற்றவும் முடிகிறது என்று கூறினார்.

இது போன்று பழங்காலத்திலும், தற்காலத்திலும் பாம்பு எந்த அளவு வைத்தியத் துறையில் இடம் பெற்றுள்ளது என்று எண்ணும் போது நாம் பெருமைப்பட வேண்டியுள்ளது.

# 7

# கடற் பாம்புகள்

மலேய்சியா, சிங்கப்பூர் ஆகிய இரு நாடுகளும் கடலால் சூழப்பட்டவை. கிட்டத்தட்ட 18 வகைப் பாம்புகள் இந்த கடற் பாம்பு வகைகளில் உண்டு. கடல் நீராடுதல் சர்வசாதாரணமாக இவ்விருநாடுகளுக்கும் உள்ள பொழுது போக்கும் நிகழ்ச்சிகளில் ஒன்ருகும். ஆகவேதான் இதைப் பற்றி ஒரு தனி அதிகாரத்தையே உருவாக்கினேன். இக்கடற் பாம்புகளைப் பற்றி நான் அதிக ஆய்வு நடத்தும் வாய்ப்புகள் இல்லையென்ருலும் ஒரு சில பாம்புகளைப் பற்றியேதான் அதிகம் அறிய முடிந்தது.

இப்பகுதியில் கடற்பாம்புகளைப் பற்றி தனித்தனியே நான் இங்கு விளக்கம் தரவில்லை. இது தேவையும் இல்லை. ஏனெனில் இப்பகுதியில் கடலில் உள்ள பாம்புகள் அத்தனையும் நச்சுப் பாம்புகள் என்று கருதப்படுவதுதான் காரணம். அதோடு கடற் பாம்புகளின் வால் தட்டையாகத் துடுப்புப் போன்ற உருவ அமைப்பைக் கொண்டது. இந்த இரு காரணங்களினுலேயே நான் தனித்தனியே விளக்கம் தருவது தேவையற்றது என்று விட்டுள்ளேன். இக்கடற் பாம்புகளைப் பற்றி டாக்டர் ரீட் என்பார் நடத்திய ஆய்வின் சில விவரங்களையும், டாக்டர் டுவீடீ என்பார் குறிப்பிட்டுள்ள சில விவரங்களையும் இப்பகுதியில் குறிப்பிட்டுள்ளேன்.

கடற் பாம்புகள் இரண்டு குடும்பத்தைச் சார்ந்தவை. லேடிகாடினே (Laticaudinae) என்ற குடும்பத்தில் லேடிகாடே (Laticauda), ஏபியூரஸ் (Aepyurus) என்ற இருவகைப் பாம்புகள் உள்ளன. பாக்கி 16 வகைப் பாம்புகளும் ஹைட்ரோபினே (Hydro Phiinae) என்ற குடும்பத்தைச் சேர்ந்தவை.

'லேடிகாடினே குடும்பத்தைச் சார்ந்த பாம்புகளுக்கு வயிற்றுச் செதில்கள் குறுக்களவில் முழுமையும் நீண்டோ, அல்லது குறுக்களவில் சிறிது நீளம் குறைந்தோ காணப்படும். மற்றைய கடற் பாம்பு வகைகளுக்கு இவ்வயிற்றுச் செதில்கள் உடல் முழுதும் வளர்ச்சியடையாது மிகச் சிறிய செதில்களாகக் காணப்படும்.

கடற் பாம்புகளில் ஒரு வகையைத் தவிர மற்றது அனைத்தும் குட்டிகளாகவே பிறக்கின்றன. கடலிலும் நிலத்திலும் வாழும் பாம்பு எனப் பெயரிய Amphibious Sea Snake (Laticauda Colubrina) என்ற பாம்பு மட்டும் முட்டையிட கடலிலிருந்து கரைக்கு வந்து முட்டையிட்டு கடலுக்குள் செல்லுகிறது.

சில கடற்பாம்புகள் சில சமயம் ஒரே கூட்டமாகக் கூடி பின்னிக் கொண்டு கிடப்பதும் உண்டு. டாக்டர் டுவீட, தன்னுடைய நூலில் திரு. வில்லவி (Mr. Willoughby) என்பார் "எப்போதும் அடிச்சுவடு புதுமையாக இருக்கிறது" (The Trail that is Always New) என்ற நூலில் கடற் பாம்புகளின் வியக்கத் தக்க ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளார். இந்நிகழ்ச்சி 1932இல் மலாக்கா நீரிணையில் நடந்ததாக குறிப்பிட்டுள்ளார். பத்து அடி அகலத்திற்கு கடற் பாம்புகள் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டிருந்ததைக் கண்டு இந்தச் சங்கிலித் தொடர்பு போன்ற பாம்புகளின் பின்னல் எவ்வளவு தூரத்திற்குச் செல்கிறது என்று பார்க்க ஒரு கப்பலில் சென்றபோது பத்தடி அகலத்திற்குள்ள பாம்புப் பின்னல் 60 மைல் நீளம் தொடராக இணைந்திருந்ததாகக் கூறியுள்ளார். பத்தடி அகலத்திற்கு, 60 மைல் நீளம் வரை இது போன்ற பின்னிக் கொண்டு எத்தனையோ மில்லியன் பாம்புகள் இத்தொடர்பில் பங்கு கொண்டதாகக் குறிப்பிட்டுள்ளனர். அஸ்ட்ரோஷியா ஸ்டாட்ஸி (Astrotia Stottsi) என்ற கடற் பாம்பு வகையே இது போன்று சங்கிலித் தொடரில் பங்கு பெற்றதாகவும், இவைகள் ஒவ்வொன்றும் நன்கு பருத்தும் ஐந்து முதல் ஆறடி வரை வளர்ச்சி பெற்றிருந்ததாகவும் குறிப்பிட்டுள்ளார். இந்த நிகழ்ச்சி கடற் பாம்புகளின் பிறப்பு பற்றிய விவரத்தோடு தொடர்பு கொண்டதாக இருக்கும் என்று எண்ணினாலும், யாரும் இந்த நிகழ்ச்சி பற்றித் துருவி ஆராயவில்லை.

கடற்பாம்புகளுக்கு உணவு மீன் வகைகள்தான் என்றாலும் இந்த மீன் வகைகளில் பலம் வாய்ந்த முட்கள் வயிற்றுக்குள் செல்லும் போது மீனின் சதை மட்டும் பிரிக்கப்பட்டு முள் முழு அளவில் வெளி வருவதாகவும், சில சமயம் விழுங்கப்பட்ட மீன்

களின் இந்தப் பலம் வாய்ந்த முட்கள் கடற் பாம்புகளில் முதுகுப் புறமும் வயிற்றுப் புறமும் நீட்டிக் கொண்டிருந்தபோதும் எவ்வித வீக்கமோ வலியோ இன்றி அவை வாழ்ந்ததாகவும் டாக்டர் எ. அன்னன்டேல் (Dr A. Annandale) என்பவர் குறிப்பிட்டுள்ளார்.

கடற்பாம்புகள் அனைத்திற்கும் நாக வகைகள், கிரெய்ட் வகைகளுக்கு இருப்பதைப் போன்று இரு நச்சுப் பற்கள் உண்டு. இவைகளில் ஏயிபியூரஸ் வகைகளின் நஞ்சு அதிக சக்தியுடையதாக இல்லாமலும், லாடிகாடே வகையின் நஞ்சு அதிக சக்தி வாய்ந்ததாகவும் இருக்கும்.

**கடலிலும் நிலத்திலும் வாழும் கடற் பாம்பு**
Amphibious Sea Snake

இந்தப் பாம்புதான் நிலத்திலும் நீரிலும் வாழும் கடற் பாம்பு. இது முட்டையிடக் கரைக்கு வருகிறது. குறிப்பாக வட மலேய்சியாவில் இவைகள் அதிகம். சிங்கப்பூர் தீவுகள் சிலவற்றில் சிலவற்றை நான் பிடித்துள்ளேன். அடிக்கடி இவைகள் இத்தீவுகளில் தென்படாவிட்டாலும் அரிதாகத் தென்படுகின்றன. முதுகு நீலங்கலந்த சாம்பல் நிறம் உடையது, உடல் முழுதும் குறுக்கு வாட்டத்தில் கருநிற வளையங்கள் உள்ளவை. தலை மஞ்சளும் கருமையுமுடைய அடையாளங் கொண்டவை.

கடற் பாரைகளின் அடியிலும், ஆழமற்ற கடற் பகுதியிலும் இவை காணப்படுகின்றன. வலிய வந்து தாக்குபவை அல்ல. தலை சிறுத்திருக்கும். வால் துடுப்பு போன்று பட்டையானது. ஐந்தடி வரை வளரக் கூடியவை.

**பொதுவான கடற் பாம்பு**
Common Sea Snake

வளர்ந்த பாம்பின் வயிற்றின் அடிப்புறம் வெண்மையாகவும், மேற்புறம் சாம்பல் நிறம் உடையதாகவும், இளம் பாம்புக்குக் கரும் சாம்பல் நிறக் குறுக்குக் கோடும், அல்லது கரும் சாம்பல் நிற வளையங்களும் காணப்படும். மேல் உதட்டின் முன் செதில் சிறிது வெளியே தள்ளியிருப்பதானது மூக்கு நீண்டிருப்பது போல ஒரு தோற்றம் உடையதாக இருக்கும்.

இவைகள் சர்வசாதாரணமாக இப்பகுதியின் கடலில் காணப் படுபவை. மூன்றடி வரை வளரும். வால் துடுப்பு உருக் கொண்டது.

மற்ற கடற் பாம்புகளில் சில தவிட்டு நிறமாகவும், சில பசுமையும் மஞ்சளும் கலந்ததாகவும், சில உடல் கருமையாக, மஞ்சள் வளையம் கொண்டதாகவும், சில 3 அடி முதல் 6 அடி வரை வளரக் கூடியதாகவும், ஆனால் எல்லாப் பாம்புகளுக்கும் வால் மட்டும் துடுப்பு போன்று தட்டையாகவும் அமைந்திருக்கும்.

கடலில் அலை அதிகமாக உள்ள இடங்களில் இவைகள் அதிகம் காணப்படுவதில்லை. அதோடு குளிக்கின்றவரையும் வலிய தாக்குவதில்லை. குளிக்கும் போது காலில் பாம்பு தென் பட்டால் உடனே அதை அமுக்கவோ, உதைக்கவோ முற்படாமல், மெதுவாக விலகினால் இக்கடற்பாம்புக் கடியி னின்றும் தப்பமுடியும்.

# 8

# நஞ்சின் தன்மை

"எண்சான் உடம்பிற்கு சிரசே பிரதானம்" என்பது போல் பாம்பின் உயர்வுக்கும், தாழ்விற்கும் மூலமாக அமைந்தது நச்சுப் பாம்புகளிடத்திலேயுள்ள நஞ்சுதான் என்பதை நாம் மறுக்க முடியாது. கெடுமதி கொண்ட முரடர்களை நஞ்சுள்ளம் கொண்டவன் என்று நாம் அழைக்கத் தவறுவதில்லை. சில வன்நெஞ்சம் கொண்டவரை "அவன் ஒரு நச்சுப் பாம்பு" என்று அழைக்கிறோம். தீய வியாதிகளைத் தனது உடைமையாகக் கொண்டு தொழில் நடத்தும் பெண்டிரை "அவள் ஒரு நாகப் பாம்பு" என்று சிலர் அழைக்கின்றனர்.

மக்களிடையே பாம்பின் நஞ்சின் மேலுள்ள வெறுப்புக் காரணமாகவும், அச்சம் காரணமாகவுமே தீய செயல்களுக்கும், தீயவர்களுக்கும் நஞ்சினை உவமையாக்கினுர்கள்.

"மனிதர்களும் பாம்புகளும்" என்ற நூலெழுதிய ரமோனு டெஸ்மான்ட் மோரிஸ் (Ramona and Desmond Morris) என்ற இருவரும் அண்மையில் 1954இல் உலக சுகாதாரக் கழகத்தில் பாம்புக் கடியினுல் இறந்தவர் தொகை பற்றிய கணக்கெடுப்பை விவரித்துள்ளனர்.

உலக மக்கள் தொகையில் ஒரு ஆண்டிற்கு 30,000 (முப்பதினுயிரம்) பேர் பாம்புக் கடியினுல் உயிரிழப்பதாக சுவாரூப் மற்றும் கிரேப் (Mr Swaroop and Grab) ஆகிய இருவரும் எழுதியதாகக் குறிப்பிட்டுள்ளனர்.

பர்மாவில்தான் உலகத்திலேயே பாம்புக் கடியினுல் உயிரிழப்பவர் தொகை அதிகம். அதற்கு அடுத்தடுத்துத் தொடராக இந்தியா, சிலோன், வெனிசுவேலா, பிரேஸில் ஆகிய நாடுகள் இடம் பெற்றுள்ளன.

அமெரிக்க மக்கள் தொகை 16 கோடியில் ஆண்டொன்றிற்கு 30 பேர் பாம்பின் கடியால் கொல்லப்படுகின்றனர் என்று கிளாபர் (Mr. Klauber) என்பார் கூறுகிறுர்.

எச். டபிள்யூ. பார்க்கர் ஆஸ்திரேலியாவில் 77 சதவீத நச்சுப் பாம்புகள் இருந்தாலும் பத்து மில்லியன் மக்களில் 6 பேர் தான் உயிரிழக்கின்றனர் என்றும் உலக சுகாதாரக் கணக்குப்படி இங்கிலாந்தில் 1945க்கும் 1960க்கும் இடையில் பாம்புக்கடியினுல் ஒரே ஒருவர் மட்டுமே இறந்தார் என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

இப்படி இடத்திற்கு இடம் பாம்புக் கடியினுல் ஏற்படும் உயிரிழப்பின் ஏற்றதாழ்வுக்குக் காரணம் பலவுள. சில பகுதிகளில் குறிப்பாக நஞ்சுள்ள பாம்புகள் அதிகமாக உள்ள இடங்களில் வாழும் மக்களின் பழக்க வழக்கமும், தெய்வ நம்பிக்கையும் ஒரு காரணமாகிறது. வைத்தியத் துறையின் சேவை பாம்பு கடித்தவருக்குக் கிடைக்காமல் போகாததும் ஒரு காரணம்.

சான்றுக இந்திய நாட்டினையும், பர்மாவையும் எடுத்துக் கொண்டால், இவ்விரு நாடுகளிலும் நச்சுப்பாம்புகள் அதிகம் வாழ்கின்றன. விவசாயத் தொழிலில் ஈடுபடுவோர் தொகையும் அதிகம். காலணிகள் மிகச் சிலராலேயே அணியப்பட்டாலும், அவைகளைத் தரையின் வெப்பத்தைத் தாங்கவே அணிவர். நகரங்களிலுள்ளவர்களில் மிகச் சிலர் தவிர மூடிய தோல் சப்பாத்தை அணிந்து வெளியே செல்லுபவர் தொகை மிகக் குறைவு. இதனுலேயே கிராமவாசிகள் இரவு நேரங்களில் சப்பாத்தணியாது வயல்களுக்குச் சென்றுல் பாம்புக் கடிக்கு ஆளாகிக் கிராமப்புறத் திலிருந்து நகருக்கு வைத்திய உதவி நாடி வந்து சேர்வதற்குள் பாம்பு கடித்தவர் பிணமாகி விடுகிறுர். தமிழர்கள் சப்பாத்தணிந்து நெல்வயல்களின் குறுக்கே நடக்க மாட்டார்கள். உறுபசிக்கு உதவி உயிர் காக்கும் தானியத்தைத் தெய்வமாகக் கருதியே வயல் வரப்பை அடைந்ததும் சப்பாத்தினைக் கழட்டிவிடும் பழக்கமும் ஒரு காலத்தில் இருந்தது. இன்னும் இருக்கிறது. சிலர் நாகப்பாம்புகளைத் தெய்வமாகக் கருதிக் கொல்லாது விட்டுவிடுவதும் இதுபோன்ற ஆபத்தினை உருவாக்கத் துணையாகிறது. உடுக்கும் உடைகளிலும் பாதுகாப்புள்ள உடைகள் அணியும் நாட்டினர் பாம்புக் கடியினின்றும் தப்பிக்கின்றனர். மேல்நாடுகளில் உடைகள், வைத்தியவழி இவைகளுக்கு முதலிடம் உண்டு. இதனுலேயே பாம்புகள் அதிகமுள்ள அமெரிக்கா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் பாம்புக்கடியினுல் மாள்பவர் தொகைமிகக்குறைவு.

உதாரணமாக நான் பணிபுரிந்த தெங்கா விமானத்தளத்தி லுள்ள வெள்ளையர்களின் படைப்பிரிவைச் சேர்ந்தவர்கள் காட்டுப் பகுதிகளுக்குப் பயிற்சிக்குச் செல்லும்போது பாம்புக் கடிக்கான முதலுதவிப் பெட்டியொன்றையும் உடன் எடுத்துச் செல்வதால் இதுபோன்ற பாம்புக் கடிகளினின்றும் இவர்கள் தப்புவதற்கு முன்னேற்பாடாகக் காரியங்கள் செய்யப்படு கின்றன.

மேற்கண்ட விளக்கத்தை நான் கொடுத்ததற்குக் காரணம் உண்டு. தக்க பாதுகாப்போடு, இடத்திற்கு ஏற்ப உடை யணிந்து, முன்னேற்பாடான சில விஷயங்களை மக்கள் அறிந்திருந்தால் பாம்புக்கடி நஞ்சினால் ஏற்படும் ஆபத்தைத் தடுக்கமுடியும். நஞ்சினைப் பாம்புகள் எப்படித் தயாரிக்கின்றன? ஏன் தயாரிக்கின்றன? என்பதே ஒரு மர்மமாகவும் விடை கண்டுபிடிக்க முடியாமலும் இருக்கிறது.

நச்சுச் சுரப்பியும் நஞ்சும் இல்லாத லக்ஷக்கணக்கான பாம்புகள் உயிர்வாழும்போது ஏன் பாம்பினத்தில் ஒரு சில வற்றை நஞ்சினைக்கொண்டதாக உலவவிட்டிருக்க வேண்டும்? இது விந்தையே. உலகிலே மக்களினத்திலே ஒரு சிலர் உழைத்து உண்பவர். ஒரு சிலர் உழைக்காமல் ஒய்யார ஊர்திகளில் ஊர்ந்து சென்று உழைக்காது உண்பவர் என்ற இருவகை இருப்பதைப் போல பாம்புகளுக்கும் இதுபோன்ற ஒய்யார வாழ்க்கைக்கு உறுதுணையாக நஞ்சு அமைந்துள்ளது. மனிதர்கள் செயற்கை வழிகள்மூலம் ஆடம்பரத்தில் திளைக்கின்றனர். ஆனால் பாம்பு களுக்கு இயற்கையாகவே வசதியான வாழ்வுக்கு நச்சுச்சுரப்பி துணையாக அமைந்துள்ளது.

பாம்புகள் ஒரேவகையான நஞ்சினைக் கொண்டிருக்கவில்லை. நான் முன்பு குறிப்பிட்டதைப்போல சில குறிப்பிட்ட பாம்புகள் நரம்பு மண்டலத்தைத் தாக்கும் நஞ்சினையும், வேறுசில பாம்பு வகைகள் இரத்த மண்டலத்தைத் தாக்கும் நஞ்சினையும் கொண்ட தாக இருக்கின்றன.

உலகப் புகழ்பெற்ற இந்திய நாட்டுக் கண்ணாடி விரியனும் (Russel's - Viper) அமெரிக்க நாட்டின் ராட்டில் பாம்புகளும் மலேசியா சிங்கப்பூரில் வதியும் குழிவிரியன்களும் ரத்த மண்ட லத்தைத் தாக்கும் நஞ்சினைப் பெற்றுள்ளன.

ஆப்பிரிக்கா தேசத்து கொடுமையான 'மம்பா' பாம்புகளும், உலகப்புகழ்பெற்ற நாக வகைகளும், கட்டுவிரியன்களும், பவழப் பாம்புகளும் நரம்பு மண்டலத்தைத் தாக்கும் நஞ்சினைக் கொண்டவை.

பாம்பினைப் பற்றி ஆய்வில் இறங்கிய பிறகு நான் கண்ட சில பாம்புக்கடி நிகழ்ச்சிகளைப் பற்றி குறிப்பிடுமுன் நரம்பு மண்டலத்தைத் தாக்கும் வகைகளில் பாம்பு இனத்தைச் சேர்ந்த மேற்கு ஆப்ரிக்க நாட்டுப் பச்சை மம்பா என்ற ஒரு வகைப்பாம்பினத்தின் நஞ்சின் தன்மையை அறிய தன்மீதே நஞ்சினைச் செலுத்தி அதன் விளைவினை விளக்கியுள்ள டாக்டர் எய்சன் பெர்கர் (DR. Eicen Berger) என்பவரைப் பற்றி இந்நூலில் குறிப்பிட விரும்புகிறேன்.

பல ஆண்டுகளுக்குமுன் டாக்டர் எய்சன் பெர்கர் பச்சை மம்பாவின் நஞ்சை இறக்கி அதிலிருந்து ஒரு சொட்டு விஷத்தோடு பத்துமடங்கு தண்ணீரைக் கலந்து அதிலிருந்து மிகமிகச் சிறிய அளவாக 0.2CC அளவு எடுத்துத்தன்னுடைய முன்கையில் ஊசி மூலம் செலுத்திக் கொண்டார்.

உடனே கை பற்றி எரிவது போன்ற உணர்வு பரவ ஆரம்பித்து, ஊசியால் நஞ்சு செலுத்தப்பட்ட இடம் வீங்க ஆரம்பித்து அரிப்பும் தோன்றியது. நரம்பு மண்டலம் தாக்கப்படும் உணர்வை மருத்துவர் அறிய ஆரம்பித்தார். காதுகள் செவிடாவதைப் போன்ற உணர்வு எழுந்தது. வாயிலிருந்து மிக அதிகமான நுரை தள்ள ஆரம்பித்து டாக்டர் தனக்கு வெறியுண்டானது போன்ற நிலையயடைந்தார். பதினைந்து நிமிடங்களுக்குள் இந்தக் கொடும் அனுபவங்களை அனுபவிக்க ஆரம்பித்த மருத்துவர் தன் உயிருக்கு ஆபத்து வரப்போகிறது என்பதை உணர்ந்து தன்னுடைய செயலாளரிடம் ஊசிகுத்திய இடத்திற்கு மேல் ஒரு கட்டு போடச் சொல்லி கத்தியால் ஊசி குத்தப்பட்டு வீங்கிப் போயிருந்த இடத்தைக் கீறி, பொட்டாஸியம் பர்மாங்கனேட் என்ற தூளை வெந்நீரில் கலந்து கழுவ ஆரம்பித்த பிறகும் எந்தப் பயனுள்ள மாற்றமும் இல்லை.

அவருடைய தாவாய், உதடுகள், நாக்கின் நுனி ஆகியவை மரத்துப் போக ஆரம்பித்தன. இந்த மரமரப்பு முகம் முழுதும் பரவி கழுத்துப்பக்கமும் பரவ ஆரம்பித்தது. கண்களுக்கடியிலும், நாக்கின் அடிப்பாகமும் வலி எடுக்க ஆரம்பித்தன. கைவிரல்களும் கால் விரல்களும் உணர்வுகளை இழக்க ஆரம்பித்தன. காது படபடக்கும் ஒலி கிளப்ப வலி தொண்டைக்கும் பரவி தொண்டை வீங்க ஆரம்பித்தது. மூச்சுவிட முடியாமல் பேச முடியாத நிலையும் எழுந்தது.

தனக்கு முடிவு காலம் நெருங்குவதை அறிந்த மருத்துவர் உடனே "ஸ்டிக்னின்" (Steychnine) என்ற மாற்று மருந்தை ஊசி மூலம் உடலில் செலுத்திக் கொண்டார்.

ஐந்து மணி கழிந்ததும் நஞ்சு ஊசி குத்திக்கொண்ட கை வீங்க ஆரம்பித்துப் படிப்படியாக வடிய ஆரம்பித்தது. உடல் முழுதும் வலி!

எந்தப் பொருளையுமோ, திரவத்தையுமோ விழுங்க முடிய வில்லை. அன்று இரவு கழிந்தது, மருத்துவர் உயிர் பிழைத்தார். பல நாட்கள் கழிந்தது மருத்துவர் பூரண குணம் பெற்றுத்தேர! எப்படி நஞ்சின் மகத்துவம்!

மூன்று ஆண்டுகளுக்கு முன் சிங்கப்பூரில் வதியும் கடற்கரை குழிவிரியன் பாம்பு சாங்கி என்ற இடத்தின் கடற்கரைப் பகுதியில் காதல் செய்வதற்காகச் சென்ற ஒரு ஆங்கிலப் பெண்ணின் கையை கடித்து விட்டது. ஆனால் பாம்பு லேசாகத் தான் கடித்தது. உடனே பாம்பு கொல்லப்பட்டுச் சாங்கி மருத்துவ மனைக்குக் கடிபட்ட பெண்மணியுடன் எடுத்துச் செல்லப்பட்டது.

சாங்கியிலிருந்து ஆங்கில மருத்துவர் பாம்பின் நிறம், நீளம் இவைகளைப்பற்றிய விவரங்களை எனக்கு டெலிபோனில் அறி விக்கவே நான் கடித்த பாம்பு கடல் குழி விரியன் என்று கூறி உடனே மருத்துவமனைக்கு விரைந்தேன். கடிபட்ட அம்மையாரின் கைமுழுதும் வீங்கிப் போய்விட்டது. கடிவாய் சிவப்பேறி ரத்த நாளங்கள் அழிக்கப்பட்டுவரும் அறிகுறிகள் தென்பட்டன.

மருத்துவர்கள் மாற்று மருந்தினைச் செலுத்தி பல நாட்கள் கழித்து அவ்வம்மையார் குணம் பெற்றார். தக்க சமயத்தில் பாம்பின் விஷத்தைப்பற்றி அறிவித்து ஒரு பெண்ணின் உயிரைக் காப்பாற்றியதற்காக நான் மகிழ்ச்சி அடைந்தேன்.

1968ஆம் ஆண்டு ஜூன் திங்கள் நான் நோயினால் பாதிக்கப் பட்டுச் சிங்கப்பூர் தலைமை மருத்துவமனையில் இரண்டாம் வகுப்பில் படுத்துறங்கிக் கொண்டிருந்தேன். பிற்பகல் மூன்று மணி அளவில் தூங்கிக் கொண்டிருந்த என்னை எழுப்பியவர்கள் மூன்று மருத்துவர்கள். மூன்றும்வகுப்பு வார்டில் ஒரு சீனருக்குப் பாம்பு கடித்து அனும திக்கப்பட்டிருப்பதாகவும், பாம்பினை அடையாளம் கண்டு கூறவேண்டும் என்றும் வேண்டினர். கடிபட்டவரின் உறவினர்கள் பாம்பினை அடித்துக் கடிபட்டவ ரோடு அனுப்பியிருந்தார்கள். ஒரு தேயிலைப் பையில் அப்பாம்பு போட்டிருந்ததைத் தூக்கி என்னிடம் காண்பித்தனர். 18 அங் குலமே இருந்த அந்தப் பாம்பு கடற்கரைக்குழிவிரியன் என்று கூறினேன். மருத்துவர்களின் ஐயத்தைப் போக்க என்னிடம் இருந்த மலாயாப் பாம்புகள் என்ற நூலின் விரியன்கள் பகுதியைக் காண்பித்து என் கூற்றை உறுதிப்படுத்தினேன்.

பிறகு நேரே பாம்பு கடித்த சீனரைக் காணச் சென்றேம். அவருடைய காலே ஸ்பிரிட் திரவத்தால் கழுவி சுத்தப்படுத்தி கடிபட்ட இடத்தை மருத்துவர்களிடம் காண்பித்தேன். ஆனல் அப் பாம்பின் நஞ்சு மிகமிகக் குறைவாகவே அவர் உடலில் செலுத்தப் பட்டிருந்தது என்பதை அவருடைய ரத்த சோதனே, இருதயத் துடிப்பு இவைகளேக் கொண்டு கண்டுபிடித்தனர். 25 வயதான அந்தச் சீனரின் கால் இருமடங்கு வீங்கிவிட்டது. மயக்க நிலமையும் உடலில் எரிச்சல் உணர்வும் இருந்ததாகக் குறிப் பிட்டார். ஐந்து நாட்கள் மருத்துவமனேயில் இருந்து 21 ஊசிகள் போடப்பட்டுக் குணமாகி வெளியேறினர்.

இந்தச் செய்தி மருத்துவமனே முழுதும்பரவி நான் நலம் பெற்று வெளியேறிய பிறகு அதே ஆண்டு ஆகஸ்ட் மாதம் மருத்துவர்களின் தலைமை வைத்தியர் புரொபஸர் ரேன்ஸம் என்பார் தலைமையில் பாம்புகளேப்பற்றி ஒரு ஆங்கிலச் சொற் பொழிவு நிகழ்த்தினேன். இதன்மூலம் மருத்துவர்கள் வட்டாரத்தில் நான் செல்வாக்குப் பெற முடிந்தது.

நச்சுப் பாம்பு வகைகளிலேயே சில பாம்புகளுக்கு அவை களின் நஞ்சின் தன்மை வேகம் குறைந்தும், கடுமையாகவும் இருக்கும். குறிப்பாக இது நஞ்சு பாம்பு கடிக்கும்போது செலுத்தப்படும் அளவையும் பொறுத்திருக்கும்.

குறிப்பாக மிக லேசாக விரியன் பாம்பினல் கடிபட்டவரின் நிலேமையை நான் இங்குக் குறிப்பிட்டிருந்தாலும் ரஸ்ஸல் விரியன் கள் ராட்டில் பாம்புகள் கடிக்கும்போது ஒருவர்படும் துன்பம் அளவிடற்கரியதாக இருக்கும்.

ரத்த மண்டலத்தைத் தாக்கும் பாம்புகளின் நஞ்சு உடலிலே செலுத்தப்படும்போது, ரத்தத்தின் கூட்டுச் சக்தியை உடைத்து ரத்தம் உறையும் சக்தியைப் படிப்படியாக அழிக்க ஆரம்பிக்கிறது. குறிப்பாக மிக நுண்ணிய கேபில்லரிஸ் (Capillaries) என்ற நுண்ணிய ரத்தக் குழாய்களே இந்த நஞ்சு உடைத்து ரத்தக் குழாய்களேயும், அருகிலுள்ள தசைகளேயும் அழித்துக் கரைந்த ரத்தம் கடிவாயிலிருந்து வெளியேற ஆரம்பிக்கிறது. இது முதன்முதலில் காணும் அறிகுறி.

கடிவாயைச் சுற்றிலும் உள்ள தசைகள் கருமை படர ஆரம் பித்து வீக்கம் ஏற்பட்டு ரத்தம் கசிய ஆரம்பிக்கும். நஞ்சு உடலில் ஏறஏற உடல் முழுதும் கருஞ்சிவப்பேறிய தடிப்புகள் தோன்ற ஆரம்பித்துவிடும், உடலின் உள்உறுப்புகளிலுள்ள ரத்தக் குழாய் இந்நஞ்சினல் அழிக்கப்படும்போது உள் உறுப்புகளில்

வெடிப்பு ஏற்பட்டு மூக்கு, வாய், ஆசன வாய், காது வழியாகவும் ரத்தம் கசிய ஆரம்பித்து விடும். நாடித்துடிப்பு மிக வேகமாகவும் துடிப்பின் ஒலி அடங்கியது போன்று மிக மெலிவதைப்போலும் காணப்படும். உடல் மிகப்பலவீனமடைந்தும், களைப்புமேலிட்டும், மயக்க நிலைக்குச் செல்லும். வாந்தி எடுக்கும் உணர்வு அடிக்கடி ஏற்பட்டுப் படிப்படியாக முகப்பகுதியிலிருந்து மரமரப்பு ஏற்படும்.

உடலில் உள்ள அகலமான தடிப்புகள் சிலசமயம் கருநீலம் உடையதாகவும், சிலசமயம் கருநிறம் உடையதாகவும், சில சமயம் செவ்வெண்மை நிறத்திலும் தோன்றும். இந்தத் தடிப்புக்களை வைத்துப் பழங்காலத்தில் எந்த விரியன் கடித்ததோ அந்த பாம்பின் நிறத்தை மனிதன் பெறுகிறுன் என்ற எண்ணம் சிலரிடம் இருந்ததாகப் பாம்பு நூல் வல்லார் குறிப்பிட்டுள்ளனர்.

மூக்கின் வழியாகவும், வாய் வழியாகவும் குருதி கொட்டும் நிலமையைக் கடிபட்டவர் அடையும் நிலை வந்தால் நஞ்சு உடல் முழுதும் பரவ ஆரம்பித்து விட்டதென்பதற்கு அது அறிகுறி. இதுபோன்ற நிலையடைந்தவர்களைக் காப்பது சிறிது கடினமாகும். அப்படியே காப்பாற்றப்பட்டதாக முதலில் கருதப்பட்டாலும், உடலில் ஏற்பட்ட தடிப்புகளில் தங்கியுள்ள நஞ்சு சக்தியை இழக்காமல் இருந்தால் காலப்போக்கில் இந்த நஞ்சே உடலில் ஊறி ஆளைக் கொன்று விடும். ரத்த மண்டலத்தைத் தாக்கும் நஞ்சு ஒரு உயிரை வைத்திய உதவி இல்லாத சமயம் பழிவாங்க பலமணி நேரமாகும். ஆனுல் நரம்பு மண்டலத்தைத் தாக்கும் நாக வகைகளின் நஞ்சின் கொடுமை மிகுதி.

கர்னல் பிரேங்க்வால் (Coronel Frank wall) என்பவர் இந்திய நச்சுப் பாம்புகளைப் பற்றி சிறந்த ஆய்வு நடத்திய பிறகு நரம்பு மண்டல நஞ்சின் தன்மையை விளக்கியவற்றை இங்கே குறிப்பிட்டுள்ளேன்.

இந்நஞ்சு உடலில் செலுத்தப்பட்டவுடன் கடிபட்டவர் அதிக வலியுடன் ஒருவித வெறியுணர்வு கொள்ளும் நிலையடைவார். நஞ்சு ரத்தத்தோடு கலந்து நரம்பு உயிரணுவைத் தாக்க ஆரம்பிக்கிறது.

பிறகு நரம்பு மையங்களைத் தாக்க ஆரம்பித்துப் படிப்படியாக உடலில் மிக முக்கியமான மத்திய நரம்பு மண்டலத்தைத் தாக்க ஆரம்பித்து விடுகிறது. இப்படி மத்திய நரம்பு மண்டலம் தாக்கப்பட்டதும் நரம்புத் தொகுதிகள் செயலிழந்து மூச்சு இயக்கத்தைக் கட்டுப்படுத்தும் நரம்புத்தொகுதிகள் செயலிழந்து மூச்சோட்டம் பாதிக்கப்படுகிறது.

நஞ்சு உடலில் பரவப்பரவ கடிபட்டவர் மிகப் பலவீனம் அடைவதோடு கால் முதலில் மரமரத்துப் பலமிழந்து கீழே விழுகிறார். காலில் ஆரம்பித்த மரமரப்பு உடல் வழியாகத் தலைக்கேற தலை தானே பலமற்று வளைந்து விடுகிறது, தலைக்கு மரமரப்பு ஏறும்போது கண் மேலே செருக ஆரம்பிப்பதுடன் உதடு, நாக்கு இவைகள் மரமரத்துப் போய்விடுகின்றன. கீழ் உதடு தானே மடிந்து தொங்கும் நிலை பெற்றதும், உமிழ்நீர் நுரை நுரையாக கொட்ட ஆரம்பிக்கிறது.

வரவர பேச்சுக்குத் துணையான தசைகளும் முடக்கப்பட்டு வாய் பேசமுடியாத நிலையையடைந்து பற்களும் கிட்டிவிடும். கண்களும் உதடுகளும் நீலம்பாய்ந்து பேச்சற்ற நிலையில் வியர்வை வியர்ப்பதும் நின்று விடுகிறது. படிப்படியாக உடம்பின் இயக்கம் ஒன்றரை மணி முதல் 6 மணிக்குள் நின்று விடுகிறது.

மனத்திடம் உள்ளவரே இதுபோன்ற நஞ்சினால் தாக்கப்பட்டு ஒன்றரை மணி வரையோ 6 மணி வரையோ உயிருக்குப் போராடிப் பிழைக்க முடியும். வைத்திய உதவி கிடைத்தால் உயிர் காப்பாற்றப்படும். இல்லாவிட்டால் மனத்திடம் இல்லாதவராக இருந்து இந்நஞ்சு தாக்கப்பட்டால் நிமிடக் கணக்கிலேயே உயிர் பறிக்கப்பட்டுச் சிலவு கணக்கில் எழுத வேண்டியதாகி விடும். காரணம் பெரும்பகுதி பாம்புக் கடியினால் உடனே உயிரிழப்பவர்களில் அதிகமாக அதிர்ச்சி காரணமாகவே உயிரிழக்கின்றனர், பாம்பின் நஞ்சினைவிட பாம்பு கடித்ததனால் ஏற்படும் பயத்தினால் எழும் அதிர்ச்சி காரணமாகவே பலர் உயிரிழக்கின்றனர்.

சில ஆண்டுகளுக்கு முன்பு நான் எனது அலுவலகத்தில் இருந்த சமயம் தொலைபேசி மணியொலித்தது. என்னுடைய தலைமை மருத்துவர் திரு. ஹர்ரல் என்ற ஆங்கிலேயர் என்னை உடனே மருத்துவமனைக்கு அழைத்தார். காரணம் கேட்டபோது ஒரு வெள்ளையர் பாம்புக் கடியினால் ஆபத்தான நிலையில் இருப்பதாகக் கூறி உடனே வருமாறு அழைத்தார் 100 கெஜ தூரத்திலுள்ள மருத்துவ மனைக்கு விரைந்தேன். பாம்பு ஒரு சாதாரண விஷமற்ற பாம்பு. பாம்பின் நீளம் 18 அங்குலம்தான். அந்த பாம்பினை பாம்பு கடியினால் மயக்கமுற்றவரின் நண்பர் கொன்று விட்டார். நோயாளியின் கால்பகுதி முழுவதும் சோதித்தேன் எவ்வித கடியுமில்லை.

வைத்தியர்கள் மயக்க நிலையிலிருந்தவரின் மயக்கத்தைத் தெளியவைத்தனர். அவரிடம் பாம்பு எந்த இடத்தில் கடித்தது என்று கேட்டேன். அவர் நடந்த கதையைக் கூறினார். வேலைக்கு புறப்பட காரினுள் ஏறி எஞ்சினை இயக்குமுன் காலடியில் அந்த

விஷமற்ற பாம்புக் குட்டியைப் பார்த்ததும் எதுவுமே செய்ய முடியாமல் ஒரு பெரும் அலறலுடன் மயங்கி விட்டார். அவருக்குப் பாம்பென்ருல் ஒரே பயம்! சத்தம் கேட்டு அடுத்த வீட்டு நண்பர் ஓடிவந்து பாம்புக் குட்டியைக் கொன்று நோயாளியை மருத்துவ மனைக்குக் கொண்டுவந்து விட்டார். ஒரு பாவமும் அறியாத பாம்புக்குட்டி கொலை செய்யப்பட்டது. மருத்துவமனையிலுள்ள மருத்துவர் முதல் மற்ற சிப்பந்திகளையும் கலக்கிய இந்த நிகழ்ச்சி மூலம் பாம்புக் கடியில்லாமலேயே மயக்கமடைந்த ஒரு ஆகாயப் படை வீரரைக் கண்ட நிகழ்ச்சியை எண்ணிச் சிரித்தேன்.

இந்த முறையை வைத்தே மேனாட்டில் ஒரு காலத்தில் கருச் சிதைவுக்குப் பாம்புகளைக் காட்டியே கருச்சிதைவு நடத்தப்பட்ட தாக ஒரு நூலில் படித்தேன்.

பாம்பின் நஞ்சு சுத்தமானதாகவும் எவ்வித மணமுமின்றியும் ருசியற்றதாகவும் இருக்கும். சிறிது மஞ்சள் கலந்த வெண் திரவம்தான் இந்தக் கொடு நஞ்சு.

யார் இதைச் சாப்பிட்டார்கள்? என்ற கேள்வியை எழுப்ப லாம். ஆப்பிரிக்க பாம்புகளைப் பற்றிய நூலொன்றில் இரண்டு ராஜநாகத்தின் நஞ்சினை நீக்ரோ ஒருவர் குடித்தும் அவருக்கு எவ்வித மாற்றமுமில்லை. இந்த நஞ்சினை வாயிலோ வயிற்றிலோ எவ்வித புண்ணும் இல்லாதவர் குடித்தால் அவர்களை இக்கொடும் நஞ்சு ஒன்றும் செய்யாது என்று பல சோதனைகள் மூலம் பாம்பு நூல் வல்லார் உறுதிப்படுத்தியுள்ளனர். ரத்தத்தோடு கலக்கும் போதுதான் இந்நஞ்சு அதன் கொடியதன்மையை வெளிப்படுத்து கிறது. இதனாலேயே தற்காலத்தில் பயோரியா வியாதி அதிக முடையவர் பாம்பு கடித்தவரின் கடிவாயிலிருந்து ரத்தத்தை உறிஞ்ச அனுமதிப்பதில்லை.

பாம்பின் நஞ்சினை அதன் சக்தி குறையாத நிலையில் பல ஆண்டுகள் வைத்திருக்கமுடியும். உலரவைத்துப் பாடம் செய்யப் பட்ட விஷத்தை 32 ஆண்டுகள் வைத்திருந்து பிறகு தண்ணீரில் கரைத்துச் சோதித்தபோது அதன் நச்சுத்தன்மை சிறிதுகூடக் குறையாமல் இருந்ததை திரு.கிராம்டன் குறிப்பிட்டுள்ளார்.

உயிருள்ள பாம்பிலிருந்து எடுக்கப்பட்ட நஞ்சும், அடித்துக் கொல்லப்பட்ட பாம்பினிடமிருந்து எடுக்கப்படும் நஞ்சும் ஒரே சக்தி வாய்ந்தது என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

ஆனால் இந்த நஞ்சினைக் கொதிக்க வைக்கும்போது நஞ்சு சக்தியை இழந்துவிடுகிறது.

1967 ஆம் ஆண்டில் டிசம்பர் திங்கள் அமெரிக்காவிலிருந்து வெளியிடப்பட்ட "சயின்ஸ் டைஜஸ்ட்" என்ற இதழின் பக்கம்

13இல் 101 தடவை உலகத்தின் மிகக்கொடிய நஞ்சினைக்கொண்ட பாம்புகளால் கடியுண்டும் இன்றும் உயிருடன் வாழும் வில்லியம் இ. ஹேஸ்ட் (William E. Haast) என்பாரைப்பற்றிய ருசிகரத் தகவல் கொடுக்கப்பட்டுள்ளது. அமெரிக்காவின் மியாமி என்ற இடத்தில் உள்ள பாம்பு நிலையத்தின் இயக்குநர் திரு ஹேஸ்ட் அவர்கள். பாம்பு நஞ்சினைத் தயாரிக்கும் உலகத்தின் தலைசிறந்த இடமாக இன்று விளங்குகிறது. ஐம்பத்தாறே வயதுடைய இந்த பாம்பு நூல் வல்லார் இதுவரை ஆறு லட்சம் பாம்புகளிலிருந்து நஞ்சினை இறக்கியுள்ளார். பாம்புக் கடிக்கு மாற்று மருந்தும் இந்த நிலையத்தில்தான் பெரிய அளவில் தயாரிக்கப்பட்டு வெளி நாடுகளுக்கு அனுப்பப்படுகிறது.

இந்த விந்தை மனிதரை உலகத்தின் கொடிய பாம்புகளான இந்தியக் கட்டுவிரியன், பவழப் பாம்புகள், பச்சை மம்பா, கரு நாகங்கள், ராஜ நாகங்கள் பலமுறை கடித்தும் இன்றும் உயிரோடு வாழ்கிறார் என்றால் இது வியப்பே.

படிப்படியாக இவர் உடலில் ஏற்றப்பட்ட நஞ்சே இன்று எந்தப் பாம்பு இவரைத் தீண்டினாலும் இவர் பாதிக்கப்படாத அளவுக்கு இவருடைய ரத்தமே மருந்தாக நின்று இவரைக் காக்கிறது.

டாக்டர் "பெனு" என்பவர் இவருடைய ரத்தத்திலிருந்தே பாம்பு கடிக்கான மாற்று மருந்தைத் தயாரித்ததை விளக்கியுள்ளார்.

மயிர்க் கூச்செரியும் சம்பவம் ஒன்று இங்குக் குறிப்பிட வேண்டியுள்ளது. ஐந்தே வயதுள்ள அமெரிக்க மாணவன் ஒருவன் கொடிய பவழப் பாம்பினால் கடிபட்டு உயிர் போய்க் கொண்டிருந்த செய்தியை ரேடியோ மூலம் அறிந்து திரு ஹேஸ்ட் அவர்கள் ஹெலிகாப்டர் உதவிமூலம் பையன் அனுமதிக்கப் பட்டிருந்த மருத்துவமனைக்குச் சென்றார். டாக்டர் ஹேஸ்ட் தன் குருதி மூலம் தயாரித்த மருந்தினை ரத்தக் குழாயில் புகுத்தி மருத்துவமனையிலிருந்து பையன் உணர்வு பெற்றதை அறிந்து ஹெலிகாப்டரில் கிளம்பிய சமயம் மருத்துவ மனையிலிருந்து திரு ஹேஸ்டினைக் கைகாட்டி அழைத்தனர். உணர்வு பெற்ற பையன் திடீரென்று தன் சுய உணர்வை இழக்கவே மறுபடியும் திரு ஹேஸ்ட் அவர்கள் தசைமூலம் மருந்தினைச் செலுத்தவே மூன்று மணி கழித்து அம்மாணவன் முற்றிலும் குணம் பெற்றான். இந்த விந்தை மனிதரின் சக்தி எந்தப் பாம்பின் நஞ்சிற்கும் எதிர்ப்பாயமைந்து நஞ்சினை வேறுபல முக்கிய நோய் களுக்குப் பயன்படுத்தும் அளவிற்குச் சென்றுள்ளது.

9

# நஞ்சு முறிப்பிகள்

கடந்த சில பகுதிகளில் பாம்புக் கடியினுல் ஏற்படும் ஆபத்தான விளைவுகள் பற்றி ஓரளவு நீங்கள் அறிந்திருக்க முடியும். பாம்பு நஞ்சினைப் பகுத்துப் பார்க்கும்போது அதிலுள்ள பல பொருட்கள் பல விளைவுகளை மனிதருக்கும் மிருகங்களுக்கும் ஏற்படுத்தி விடுகின்றன. இதிலுள்ள முக்கிய பொருட்களாக ஆஸ்திரேலிய பாம்பு நிபுணர் திரு என். எச். பெர்லி என்பார் குறிப்பிட்டுள்ளவற்றில் மூல நரம்புகளைத் தாக்கும் நியூரோடாக்ஸினும் (Neurotaxin) ரத்தக் குழாய்களோடு படிந்திருக்கும் எண்டோதீலியல் ரத்த அணுக்களைத் தாக்கும் ஹெமோர்ரேஜின்ஸ் (Haemorrhagins) என்ற பொருளும், சிவப்பு ரத்த அணுக்களை அழிக்கும் ஹெமோலிசின்ஸ் (Haemolysins) என்ற பொருளும் இரத்த நுண்ணமங்களைத் தாக்கும் சைடோலிசின்ஸ் (Cytolysins) என்ற பொருளும், ரத்த உறைவைத் தடுக்கும் ஆன்டிபைப்ரின்ஸ்(Antifibrins)என்ற பொருளும், பாம்புகளுக்குச் செரிமானத்திற்குத் துணையாக இருக்கும் பெர்மண்ட்ஸ், கினேஸெஸ் (Ferments and kinases) ஆகிய இரு பொருட்களும் அடங்கியிருக்கின்றன. மேலே குறிப்பிட்ட பொருள்களில் சில, சில பாம்புகளுக்கு அதிக அளவிலும் சிலவற்றிற்குக் குறைந்த அளவிலும் இருக்கின்றன. இப்படி இருப்பதால்தான் சில பாம்புகள் கொடு நஞ்சு கொண்டவையாகவும் சில பாம்புகள் நஞ்சின் வேகம் குறைந்தவையாகவும் காணப்படுகின்றன.

இதுபோன்று நஞ்சினுல் தாக்கப்படும் மனிதர்களையோ, மிருகங்களையோ காப்பாற்றக் கொடுக்கப்படும் மருந்துதான் நஞ்சு முறிப்பிகள் எனப்படும். இவைகள் வாய் வழியாகவும் உட்செலுத்தப்படும். அல்லது மாற்றுப் புகுத்தல் முறையிலும் (Injection) உட்செலுத்தப்படும், அல்லது கடிவாய் வழியாகவும் செலுத்தப்படும். தமிழகத்திலே வாழ்ந்த சித்த வைத்தியர்கள்,

மூலிகைகள்மூலம் கடும் நஞ்சினை இறக்கியிருக்கிறார்கள். தமிழ் மூதறிஞர் திரு கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் நாகம் தீண்டியதற்கு வாழைப் பட்டைகளையும், வாழைப்பட்டைச் சாற்றையும் நஞ்சு முறிப்பியாகக் குறிப்பிட்டுள்ளார், 1999 ஆம் ஆண்டு பர்மாவில் கூடிய பாம்புக்கடி மருந்து ஆய்வைப் பற்றி வெளியிட்டுள்ள செய்தியில் பப்பாளிப் பழம் கடிவாயில் தேய்க்கப்படுவதாக 'தமிழ் முரசு' சிங்கப்பூர் நாளேட்டில் செய்தி வெளியானது. தற்காலத்தில் மாற்றுப் புகுத்தல் முறையில் நஞ்சு முறிப்பிகள் செலுத்தப்படுகின்றன.

சாதாரணமாகத் தீங்கு விளைவிக்கக்கூடிய ஏதாவது ஒரு சில நச்சுப் பொருளோ, கிருமியோ நமது உடலில் செலுத்தப்படும்போது மனித உடல் இயற்கையாகவே இந்த நஞ்சின் அல்லது கிருமியினால் ஏற்படும் விளைவுகளைத் தடுக்க ஒரு மாற்றுப் பொருள் உற்பத்தி செய்யப்படுகிறது. ஆனால் நச்சுப் பாம்பின் நஞ்சு கடிமூலம் உடலில் பாய்கிறபோது கொடிய நஞ்சின் வேலையைத் தடைசெய்ய இந்த மாற்றுப் பொருளை உடனடியாக நம் உடல் தயாரித்து அக் கொடிய நஞ்சின் கொடுமையைத் தடைசெய்ய முடிவதில்லையாதலால் மனிதன் இறந்துபடுகிறான்.

ஆனால் இந்த மாற்றுப் பொருள் உற்பத்தி நம் உடலில் வேகமாகத் தயாராகி நஞ்சின் கொடுமையைத் தாங்கிக் கொள்ளும்படி அவன் இருந்தால் ஒருமுறை எந்தப் பாம்பு கடித்து பிழைத்தானோ அதே பாம்பு அவனை மறுபடியும் தீண்டினால் அவனுக்கு எந்த தீய விளைவும் ஏற்படுவதில்லை.

இதேபோல்தான் மிகக் குறைவான நஞ்சு படிப்படியாக நல்ல இடைவெளிக்கொரு முறை செலுத்தி, பிறகு இந்த அளவை சிறிது கூடுதலாக இதேமுறையில் உடலில் செலுத்தி நஞ்சின் கொடுமையினின்றும் விலக்கைப் பெற்றால் எந்த நஞ்சுள்ள பாம்பின் நஞ்சு உடலில் செலுத்தப்பட்டதோ, அந்த நஞ்சு கொண்ட பாம்பு இப்படிச் செலுத்தப்பட்டவரின் உடம்பில் மிக அதிக அளவிலான நஞ்சினைச் செலுத்தினாலும் அது ஒன்றுமே செய்யாது.

இந்த முறையில்தான் பேரறிஞர் திரு பில் ஹேஸ்ட் என்ற பாம்பு நிபுணர் இன்று எந்த நஞ்சுள்ள பாம்பு அவரைத் தீண்டினாலும் அவரை ஒன்றும் செய்ய முடியாத அளவுக்கு நஞ்சு விலக்குமுறை செய்து கொண்டுள்ளார்.

இதே முறையில்தான் இந்தியாவின் தலைசிறந்த பாம்பாட்டிகள் தங்கள் உடம்பினை நஞ்சேற்றி நச்சுத் தடைவலிமையைப்

பெற்றுள்ளனர். நாகத்தின் நஞ்சினை மட்டும் உடலில் முறைப்படி அளவோடு ஏற்றி நச்சுத்தடை செய்து கொண்டிருந்தாலும் ரத்த மண்டலத்தைத் தாக்கும் விரியன் கடிக்கின்றபோது இந்த நச்சுத் தடைமுறை பயனளிப்பதில்லை. ஆகவே நரம்புகளைத் தாக்கும் பாம்பின் நஞ்சினையும், ரத்த மண்டலத்தைத் தாக்கும் நஞ்சினையும் படிப்படியாக ஏற்றி அதன் கொடுமையை நம் உடலில் உற்பத்தியாகும் மாற்றுப் பொருள் எதிர்த்துப் படிப் படியாக வெற்றி பெற்றால்தான் மனிதன் இதில் வெற்றி காண முடியும். ஆனால் இந்த நஞ்சேற்றும் சோதனையில் வெற்றி காண்பதற்குள் மனிதன் ஏற்கும் மரணப் போராட்டத்தின் துன்பம் மிகக் கொடுமை வாய்ந்ததாகவே இருக்கும்.

திரு ஜான் கிராம்டன் அவர்களின் நூலின்படி டாக்டர் பேய்ரர் (Dr Fayrer) முதன் முதலில் சம அளவுள்ள பாம்பின் நஞ்சும் நச்சுத் தடை செய்யப்பட்ட மிருகத்தின் ரத்தத்திலிருந்து எடுக்கப்பட்ட நிணநீரும் ஒன்றாகக் கலந்து சாதாரண ஒரு மிருகத்தில் செலுத்தும்போது எவ்வித விளைவும் அதற்கு ஏற்பட வில்லை என்று கண்டார்.

இதுபோன்ற பல சோதனைகளுக்குப் பிறகு நச்சுத் தடை செய்யப்பட்ட மிருகத்தின் நிணநீர் பாம்பின் நஞ்சு முதலில் செலுத்தப்பட்டுத் துன்பப்படும் மிருகத்திற்குக் கொடுக்கப்பட்ட போது நஞ்சின் தன்மை முறியடிக்கப்பட்டது. இப்படித்தான் நஞ்சு முறிப்பிகள் உருவாக்கப்பட்டன.

அம்மைப்பால் தயாரிக்கும் முறையையொத்தே குதிரை களுக்கு நஞ்சினைப்படிப்படியாக ஏற்றி அதன் ரத்தத்தைத் தூய்மையான சீசாக்களில் நிரப்பி. சில மணி நேரம் வைத்திருந் தால் குருதி அடியில் தங்கிக் குருதியிலுள்ள நிணநீர் மேலே தெளிவாக நிற்கும். இதை இறுத்தெடுத்துத்தான் பத்திரமாக சீசாக்களில் அடைத்துப் பாம்பு கடித்தவுடன் இது உடம்பில் ஏற்றப்படுகிறது. உடனே பலனும் அளிக்கிறது.

வாய் பேசாத இக் குதிரைகள் வம்புபேசும் மனித குலத்தைக் காக்க தன் குருதியையும் கொடுத்து உயிரையும் இழக்கிறது. பாம்பு கடியினால் ஏற்படும் அழிவைக் காக்க நடமாடும் ஆய்வுச் சாலையாக நின்று எவ்வளவோ இன்னல்களை ஏற்கும் இக் குதிரை களுக்கு நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தவிர வேறு என்ன சொல்ல முடியும்.

செயற்கையான முறையில் நச்சுத்தடை செய்வதும் நஞ்சு முறித்தலும் எவ்வாறு கைக்கொள்ளப்பட்டது என்பதனை அறிந்தோம்.

இனி இயற்கையாகவே நஞ்சு எவ்வித மாறுதலும் உடலில் ஏற்படாதவாறு இன்று சில மிருகங்கள் உலகில் வாழ்கின்றன.

இவைகளில் மிக முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவை பாம்புகளுக்குப் பரம வைரிகளான கீரிப்பிள்ளைகளும், முள் ளெலிகளும் ஆகும். இந்த இரு மிருகங்களும் பாம்புகளைக் கண்டால் கொல்லாமல் விடுவதில்லை. இந்திய நாட்டில் சுற்றுப் பயணிகளை மகிழ்விக்க பாம்பாட்டிகள், சர்வ சாதாரணமாகக் கீரிக்கும் பாம்பிற்கும் சண்டையை ஏவிவிட்டு ரத்தம் கொட்டக் கொட்ட பாம்புகளைக் கீரிகள் கொல்லும் காட்சி களை ஏற்பாடு செய்கின்றனர்.

இந்தத் தற்காலிக இயற்கையான நச்சுமுறிவைக் கொண்ட கீரி தன் உடலை விரைக்க வைத்து உடம்பின் ரோமங்களைச் செங்குத்தான முறையில் நிமிர்த்திய நிலையில் பாம்புகளைக் கொன்று தின்று விடுகிறது.

பறவைகளில் கழுகு வகைகளும் பாம்பின் பரம வைரியாக இருந்து பாம்புகளைக் கொன்றொழிக்கின்றன.

18 அடி நீளமுள்ள ராஜ நாகங்களை இரண்டடி நீளமேயுள்ள இந்தச் சிறு கீரிகள் போரிட்டுக் கொன்றொழிப்பதும் இயற்கைப் படைப்பின் விந்தையேயாகும்,

# 10

# பாம்பினங்கள்

இப்பகுதியில் குறிப்பாக மலேசியா, சிங்கப்பூர், தமிழ்நாடு ஆகிய இடங்களில் காணும் முக்கிய பாம்புகளைக் குறிப்பிட்டு உலகில் உள்ள பாம்பினங்களின் பிரிவுகளையும் விளக்கியுள்ளேன். சிலவரை படங்களை 18வயதுள்ள எனது மூத்தமகள் மலர்விழி தயாரித்துத் தந்துள்ளார். அதோடு உலகப் பாம்புகள் என்ற தலைப்பில் திரு. ஜான் ஸ்டிட் வொர்த்தி ((John Stidworthy) என்பார் எழுதியுள்ள நூலிருந்து பயனுள்ள சில படங்களையும் வரைந்து தந்துள்ளார். மலருக்கு எனது நன்றி.

**கற்றது கைமண்ணளவு**
**கல்லாதது உலகளவு**

என்பார்கள். சிங்கப்பூரில் கிட்டத்தட்டப் பத்து ஆண்டுகள் பாம்புகளைப்பற்றி ஆய்வு நடத்தினேன், சிங்கப்பூரின் தேசிய நூலகத்திலுள்ள பாம்புகள் பற்றிய நூல்கள், நான் வேலை செய்த பிரிட்டிஷ் விமானதளங்களில் சிங்கப்பூரிலுள்ள தெங்கா என்ற விமான தளத்தில் நான் மருத்துவத்துறை அதிகாரிகளின் உதவியோடு நிறுவிய ஒரு சிறு மிருகக் கண்காட்சி சாலை, எனதுவீடு, மலேயசியாக் காடுகள் ஆகியவை எனது ஆய்விற்கு மையமாக விளங்கியவை.

மலேய்சிய சிங்கப்பூர் பாம்புகள் பற்றி எனக்குப் பெருந்துணையாக உதவிய முதல் பாம்பு நூல் திரு. டுவீடி (Dr Tweedie) என்பார் எழுதிய மலாயாப் பாம்புகள் (Snakes of Malaya) என்ற சிறந்த நூலாகும்.

1970ஆம் ஆண்டு இறுதியில் நான் லண்டனில் நிரந்தரமாகக் குடியேறிய பிறகு உயிர்ப் பாம்புகளோடு நான் பழகிய, அமைத்துக் கொண்ட தொடர்பு விடுபட்டது. அதற்குப் பதில்

மக்களது பிரச்சனைகளை அலசி ஆராய்ந்து தீர்வு காணுகின்ற பொறுப்பினை ஏற்றேன். லண்டனில் ரீஜன்ஸ் பூங்கா (Regents Park)வில் உள்ள மிருகக் காட்சி சாலையில் உலகப் பாம்புகளில் பலவற்றை வளர்த்து வருகிறார்கள்.

உலக மொழிகளை ஆராய லண்டன் அரசு கோடிக்கணக்காகச் செலவிடுவதைப் போல, உலகப் பாம்புகளை வளர்த்துப் பாம்பு இனத்திற்குச் சிறப்புத் தரும் அரசினை நான் பாராட்டாமல் இருக்கமுடியுமா?

1976ஆம் ஆண்டு மே மாதம் நான் எங்கள் அரசின் சார்பில் தமிழகம் வந்தபோது சென்னையில் துவங்கப்பட்டுள்ள பாம்புப் பூங்காவில் சில நாட்கள் எனது நேரத்தைக் கழித்துத் தமிழ் நாட்டுப் பாம்புகள் பற்றி அறியும் வாய்ப்புக் கிடைத்தது. தமிழ் மக்கள் தற்போது பாம்புகளிடம் கொண்ட பயத்தை ஒழித்துப் பற்றுதலை வளர்க்க இப்பாம்புப் பூங்கா மிகவும் உதவியாக இருக்கிறது. அறிஞர்கள் உலகப் பாம்புகளைப் பத்து பிரிவாகப் பிரித்துள்ளார்கள், அவைகளில் நஞ்சினைக் கொண்டவை மூன்று குடும்பம். பின் கடைவாய் நச்சுப் பற்களை கொண்டது ஒரு குடும்பம். மற்றவை நஞ்சற்ற பாம்புகள்.

உலகப் பாம்பு நூல் என்ற நூலை எழுதிய திரு. ஜான் ஸ்டிட் வொர்த்தி அவர்கள் இப்பிரிவுகளைப் பற்றிக் குறிப்பிடும்போது விரியன் வகைகளையும், குழி விரியன் வகைகளையும் சிலர் ஒரே குடும்பமாகக் குறிப்பிடுகிறார்கள் என்றும், கடல் நாகங்களையும் நிலநாக வகைகளையும் சிலர் ஒரே குடும்பமாகக் குறிப்பிடுவதையும் குறிப்பிட்டு உயிர் நூல் வல்லாரின் எண்ணங்கள் இந்த குடும்ப அமைப்பில் மாறுபடுவதைக் குறிப்பிட்டுள்ளார். அவருடைய மேற்கோள்படி பாம்பு வகைகளின் பட்டியலை வெளியிட்டுள்ளேன்.

உரோபிலிடே (Uropelidae) என்ற குடும்பத்தில் 40வகையும் கஸெனோபிலிடே (Xenopelidae) என்ற குடும்பத்தில் ஒரே வகையும் உண்டு. இவைகளுக்கு இரு மூச்சுப்பை உண்டு.

இந்த பத்துவகைப் பாம்புகளில் நான்கு குறிப்பிடத் தக்க நச்சற்ற பாம்புகள்-நச்சுப் பாம்புகளில் நாக வகைகள்-விரியன் பாம்புகள் - குழி விரியன்கள் கடற் பாம்புகள் ஆகியவைகள் உலகில் எங்கு பரவியுள்ளன என்பதையும் அவைகளில் குறிப்பிடத் தக்க பாம்புகளும் படங்களுக்கு அடியில் கொடுக்கப்பட்டுள்ளன.

## பாம்புக் குடும்ப வகைகள்

| வ. எ. | | | எண்கள் | குடும்பப் பெயர் | பொதுப் பெயர் |
|---|---|---|---|---|---|
| 1. | மேல் கடைவாய்ப் பற்கள் மட்டுமுடையவை. | மண்ணில் குழிப்பவை | 200 | Typlopidae<br>டைப் லோபிடே | செவிட்டு பாம்புகள்<br>Blind Snakes |
| 2. | கீழ்வாய்ப் பற்கள் மட்டுமுடையவை | ,, | 40 | Lepto typlopidae<br>லெப்டோடைப்லோபிடே | நூல் பாம்புகள்<br>Thread Snakes |
| 3. | இருதாடை பற்களுமுடையவை | ,, | 10 | Anilidae<br>அணிலிடே | Pipe Snakes<br>உருளைப் பாம்புகள் |
| 4. | ,, | தரையின் மேல் வாழ்வன | 100 | Boidae<br>போய்டே | Boas and Pythons<br>போவா பாம்புகள்<br>மலைப்பாம்புகளும் |
| 5. | ஒரே சுவாசப்பை உடையவை | விடமற்றவை ஒரு சில பின்கடைவாய் நச்சுப் பற்களுடையவை | 2500 | Colubridae<br>கலப்ரிடே | சாதாரணப் பாம்புகள்<br>Typical Snakes |
| 6. | ,, | நச்சுப் பற்கள் உடையவை | 150 | Elapidae<br>எலாபிடே | நாகங்கள்<br>Cobras |
| 7. | ,, | ,, | 50 | Hydrophidae<br>ஹைட்ரோபிடே | கடற்பாம்புகள்<br>Sea Snakes |
| 8. | | மடக்கும் நச்சுப் பற்களுடையவை | 80 | Viperidae<br>வைபரிடே | Vipers<br>விரியன் பாம்புகள் |

இந்திய நாட்டிலுள்ள நானூறு வகைப் பாம்புகளில் இருபது வகை நஞ்சுள்ளவை என்று கணக்கிட்டுள்ளனர். இந்த இருபது வகையில் நான்கு வகைகளே கொடும் நஞ்சுடையவை. நரம்பு மண்டலத்தைத் தாக்கும் நாகங்கள் (Cobras), கட்டுவிரியன், இரத்த மண்டலத்தைத் தாக்கும் கண்ணுடி விரியனும், (Rossel's Viper) சுருட்டைப் பாம்பு என்று அழைக்கப்படும் Saw Scaled Viperஉம் ஆகும்.

மலேய்சியா சிங்கப்பூரில் 213 வகைப் பாம்புகளில் 16 வகை நஞ்சுள்ளவை என்றும், இந்த 16 வகைகளில் ஆறுவகை கொடும் நஞ்சினைக் கொண்டவை. நரம்பு மண்டலத்தைத் தாக்கும் நாகங்கள் (Cobras), கட்டு விரியன்கள் (மூன்றுவகை) கண்ணுடி விரியன், ரத்தமண்டலத்தைத் தாக்கும் மலாயாக் குழி விரியன், மலைக் குழிவிரியன் ஆகியவையும் அடங்கும்.

இந்திய நாட்டுப் பாம்புகளையும், மலேய்சியா சிங்கப்பூர் பாம்புகளையும் சிலவற்றை ஒப்பிட்டும் உலகப் பாம்புகளில் ஒருசிலவற்றின் சிறப்பான குண இயல்புகளையும் அடுத்தடுத்து வரும் பகுதிகளில் குறிப்பிட்டுள்ளேன்.

இந்த நூல் பாம்புகளைப் பற்றிப் பொதுவாக நாம் அறிந்து கொள்ளத்தக்க சில சிறப்பியல்புகளை உள்ளடக்கியது, ஆகவே விரிவு படுத்தாமல் குறிப்பிடத்தக்க பாம்புகளே இங்கு விவரிக்கப் பட்டுள்ளன.

# 11

# நஞ்சற்ற பாம்புகள்

உலகில் பெரும்பாலான இடங்களில் நஞ்சற்ற பாம்புகளே வாழ்கின்றன. பெரும்பகுதி நிலத்திலும், நீரிலும் வாழ்கின்றன. வயிற்றின் அடிச் செதில்கள் பெரும்பகுதி ஒருநீளச் செதில்கள் படைத்தவை. தலையிலுள்ள செதில்கள் பெரிதாகவும் கிட்டத் தட்ட இந்தத் தலைச் செதில்கள் ஒன்பது இருக்கும்.

இவைகளில் நிலத்தில் வாழ்பவற்றுள் பலவகை வண்ணங்கள் படைத்தவை. பலவித வியத்தகு குணங்களும் கொண்டவை. மலேசியா சிங்கப்பூரில் 213 வகைப் பாம்புகள் உண்டென்றும், இந்திய நாட்டில் 200 வகை என்றும் குறிப்பிட்டிருந்தேன்.

இவைகள் ஒவ்வொன்றைப் பற்றியும் எழுதப் புகுவேனுனல் பல தொகுதிகள் வெளிவர வேண்டியிருக்கும். இந்தியப் பாம்பு களில் நஞ்சற்ற ஒருசில பாம்புகளையும், சிங்கப்பூர் மலேய்சிய பாம்புகளில் ஒருசிலவற்றையும் இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். நஞ்சுள்ள பாம்புகளைப் பற்றி விரிவாக எழுதிய பிறகு எஞ்சியிருப் பவை நஞ்சற்றவைகளே. ஆகவே மக்கள் பாம்புகள் எல்லாமே நஞ்சுள்ளவை என்பதை மனதில் எண்ணுதிருக்க எனது நூல் வழி வகுக்குமானுல் பாம்பு உலகம் வாழும்.

நஞ்சற்றவைகளில் புற்பாம்புகள் (Grass Snakes), மரப் பாம் புகள் (Tree Snakes), செவிட்டுப் பாம்புகள் (Blind Snakes), பூனைப் பாம்புகள் (Cat Snakes), நீர்க் கோலிகள், ஓலைப்பாம்புகள் (Oli Godans), ஓடு காலிகள் (Racers), சாரைப் பாம்புகள் (Rat Snakes) பறக்கும் பாம்புகள் (Paradisc Tree Snakes), உருளைப் பாம்புகள் (Pipe Snakes) என்று பலவகைகள் உண்டு.

**செவிட்டுப் பாம்புகள் (Blind Snake)**

மண்புழுவை நாம் பார்த்திருக்கிறோம். மண்புழுவின் உடலில் வளையங்கள் போன்ற தசையும் ஈரப் பசையுமிருக்கும். நாம், கூறும் செவிட்டுப் பாம்புகளோ உடல்முழுதும் சிறு செதில்களும் பளபளப்பும், வேகமாக நகரும் ஆற்றலும் 6 அங்குல நீளமும் அரை மில்லி மீட்டர் குறுக்களவும் உடையவை. இடுப்பில் எலும்புகள் உண்டு. இவைகள் குட்டி போடுவன. இதுதான் பாம்புகளிலேயே மிகவும் பழமையான பாம்பென்று கூறுவர். இவைகளின் கண்கள் பார்வை ஊடுருவும் செதிகளால் மூடப் பட்டிருக்கும், கிட்டத்தட்ட 200 வகை உலகில் உள்ளன.

**கொம்பேறி மூக்கன் (Elegant Bronzeback)**

இவைகள் மரங்களில் வாழும் மரப் பாம்புகள். தமிழ்நாட்டில் இவைகளைப் பட்டக் கொம்பேறிமூக்கன் என்பார்கள். மலாய்சிய பாம்புகளில் மிகவும் வேகமாக மரங்களில் ஏறும் பாம்புகளில் இதுவும் ஒன்று: உடல் வெண்கல நிறமாகவும் கண் அகன்றும் மூக்கு மொழுக்கையாகவும் இருக்கும். தமிழகத்தில் இவை சர்வ சாதாரணமாகக் காணப்படுபவை.

**பச்சைப் பாம்பு (Green Grass Whip Snake)**

இப் பாம்புகளை டுவீடி அவர்கள் இதன் வால் சாட்டை நுனி யைப் போல கூர்மையாக இருப்பதால் இதற்கு **'Whip Snake'** என்று பெயர் கொடுத்துள்ளார். இவைகள் கட்டைவிரல் பரு மனும், பச்சை நிறமும், கூர்மையான மூக்கும் உடையவை. ஒன்பது அடி நீளம்வரை வளரும். நஞ்சற்றது. இவைகள் செடி களிலும், கொடிகளிலும் வாழும். செடியோடு செடியாக இவை கள் இருக்கின்றபோது கண்டு கொள்வது கடினம். அண்மையில் நான் தமிழகம் வந்திருந்தபோது மூன்று வயதுள்ள எனது மகன் செல்வகுமாரிடம் பாம்புப் பூங்காவில் இந்தப் பாம்பை கொடுத் தேன். பாம்புக்கு அவனைப் பிடிக்கவில்லை. வாயைப் பிளந்து கொண்டு அவனைப் பார்த்தது. உடனே கீழே விட்டுவிட்டான்.

இதைக் கண்குத்திப் பாம்பு என்றும் கூறுவார்கள். இவை களை நான் பலமுறை வளர்த்துள்ளேன். இவைகள் குட்டி போடு பவை.

**பூனைப் பாம்புகள் அல்லது சதுப்பு நிலப் பாம்புகள் (Yellow Ringed Cat Snake Boiga Dendrophila)**

இவைகள் இந்தியாவிலும் மலேய்சியா மற்றும் ஆசிய நாடுகளி லும் சர்வசாதாரணமாகக் காணப்படுபவை. உடல் கருத்தும்

VIPER SNAKES JAWS SHOWING FANGS

AND POISON GLANDS



PARADISE TREE SNAKE

மஞ்சள் நிறவளையங்களிலுள்ள செதில் அமைப்பும் கொண்டவை. இவைகளின் கண்கள் பூனையின் கண்களைப் போன்று இரவில் இவைகளுக்கு நன்கு கண்பார்வை தெரியும் நிலையில் இதன் கண்பாவை அமைந்துள்ளதால் இதைப் பூனைப் பாம்பு என்று சொல்லுவார்கள். ஒன்பது அடிநீளம் வரை வளரும். வளர்ப்பதற்கு மிக நன்கு பழகும் பாம்பு. இதனுடைய செதில்கள் மஞ்சளும், கருமையுமாக இருப்பதால் இதைக் கட்டுவிரியன் என்று ஐயுற்று கொல்பவர்கள் உண்டு. இதன் மஞ்சள் வளையங்கள் வயிற்றுப் புறம் அகன்றும் முதுகுப்புறம் குறுகியும், வளையங்கள் குறுகலாகவும் இருக்கும். கட்டுவிரியனின் மஞ்சள் வளையன்களோ அகன்று முதுகுப்புறம் முழுதும் இருக்கும்.

சிங்கப்பூரில் பாம்பாட்டிகள் இந்தப் பாம்பைக் காட்டி மம்பாப் பாம்பு என்று ஏமாற்றுவதைக் கண்டு அவர்களை நான் விரட்டியிருக்கிறேன்.

**ஓலைப்பாம்பு (Oligodon) Kukrisnake**

இவைகள் தமிழ் நாட்டிலும், மலேசியா சிங்கப்பூரிலும் சர்வ சாதாரணமாகக் காணப்படும் தோட்டப் பாம்பு. குறிப்பாக இவை தோட்டங்களில் அதிகம் காணப்படும்.

திரு டுவீடி அவர்கள் இந்தப் பாம்பிற்கு குக்குரிப் பாம்பு என்று பெயர் கொடுத்ததற்குக் காரணம் இதன் கடை வாய்ப் பற்கள் கூர்க்கமலை சாதியினர் உபயோகப் படுத்தும் குக்குரிக் கத்தியைப் போல வளைந்திருப்பதால் இந்த பெயரை இட்டார்கள் என்று எழுதியுள்ளார்.

“ ஒரு ஓலை அடிக்க ஒன்பது ஓலை வரும் என்று” ஒரு பழமொழியுண்டு. இதை நான் தமிழகத்திலே கண்டுள்ளேன்.

எனது கிராமத்திலே ஒருவர் இந்தப் பாம்பை அடித்தார். ஒன்றன் பின் ஒன்ருக சிறிது நேரத்தில் ஏழு பாம்புகள் அடித்த பாம்பின் பக்கம் வந்தன. அத்தனையையும் அடித்தார்கள். அப்போது எனக்கு வயது 14.

சிங்கப்பூரிலே இது போன்ற பாம்பு ஒன்றை எனக்கு ஒரு நண்பர் கொடுத்தார். அதை ஒரு வலைப் பெட்டியில் அடைத்து வீட்டிற்கு எடுத்து வந்தேன்.

மறுநாள் நான் அலுவலகக் கதவைத் திறந்ததும். ஓலைப் பாம்பு ஒன்று கதவுக்குப் பின்னுல் ஊர்ந்தது. நான் அடைத்து வைத்த பாம்பு எப்படி வெளியே வந்தது என்று பாம்பைப்

பிடித்துப் பெட்டியில் போடச் சென்றேன். பெட்டியில் நான் அடைத்து வைத்த ஓலைப்பாம்பு அதனுள்ளேயே இருந்தது.

மூன்றுவது நாள் மற்றொரு பாம்பு எனது அலுவலகத்திற்குள் வந்தது.

எனக்கு இது ஒரு புதிராக இருந்தது. இது பற்றிச் சென்னைப் பாம்பு பூங்காவினர் ஆராய்வது நல்லது என நம்புகிறேன்.

**பறக்கும் பாம்பு Paradise Tree Snake (Crysopelea Paradise)**

மலேப்சியாவிலேயே மிகவும் அழகிய பாம்பு இந்த பறக்கும் பாம்பு. இவைகள் 7 அடிவரை வளரும்.

இதன் தலையில் பிரகாச வண்ணமுள்ள வண்ணப் பொட்டு களும், கருநிறச் செதில்களும் அச்செதிலின் நடுவே பச்சை வட்டப் பொட்டுகளும், உடலில் பச்சைவண்ணக் கோடுகளும் உண்டு.

பச்சைப் பாம்புக்கு இருப்பது போல இவைகளுக்கும் பின் கடைவாய் நச்சுப் பற்களுண்டு. ஆனால் இந்த நஞ்சு எந்தக் கெடு தியும் செய்ததாக ஆதாரமில்லை.

இவை ஒரு மரத்திலிருந்து மற்றொரு மரத்திற்குத் தன்னுடைய உடலை வளைத்துத் தாவும். இப்படி இப்பாம்புகள் தாவுவதைப் பார்த்த மக்கள் இதைப் பறக்கும் பாம்பென்கின்றனர். இது மட்டுமல்ல. இதன் உடல் அமைப்பு விநோதமானது. நூறு அடி உயரமுள்ள மரத்திலிருந்து இவைகள் தரையில் விழும்போது அடிபடாமல் சர்வ சாதாரணமாக ஓடும். காரணம் மரத்திலிருந்து கீழே விழும்போது இதன் வயிற்றை யோகாசனம் செய்பவர்கள் போல வயிற்றை உடம்பில் இருபக்கமும் இயக்கி வயிற்றுப் பாகம் குழிந்துவிடும்.

விமானத்திலிருந்து பாரசூட் குடை இறங்குவது போல இவைகள் லாவகமாகத் தரையில் பட்டவுடன் மறுபடியும் வயிறு பழைய நிலை அடைந்ததும் வயிற்றுச் செதிலை உபயோகித்து வேக மாக நகரும்.

**இருதலைப் பாம்பு Red Tailed Pipe Snake (Cylindro Pais Rufus)**

இவைகள் மூன்றடி வளரும் உருளையான பாம்புகள். மிக மெதுவாக ஊர்வன. தலை மொழுக்கையாகவும் முனை கூம்பியும் இருக்கும். இதன் வாலும் மொழுக்கையாகக் கூர்மையின்றியிருக் கும். உடல்முழுதும் கருத்துக் மெல்லிய வெண் கோடுகள் குறுக்கே யோடும். வயிற்றுப்புறம் செதில்களால் மூடப்பட்டுச் கருமையும்

வெண்மையுமான செதில்கள் காட்சிதரும். வாலின் அடிப்பாகம் சிவப்பாக இருக்கும்,

சிங்கப்பூரில் பாம்பாட்டிகள் இதை இருதலைப் பாம்பு என்று ஏமாற்றுகிறார்கள். ஒருவனைக் கேட்டதற்கு, அவன் "ஐயா! இதற்கு ஆறுமாதம் ஒருபக்கம் தலையும், மறு ஆறுமாதம் மற்ற பக்கம் தலையும் வரும்" என்றான்.

"உனக்கு எத்தனை முறை காலில் தலை வளரும்" என்றேன். பதில் பேசவில்லை.

உண்மை இதுதான். இப்பாம்பு தொல்லைப் படுத்தும் போது வாலை வேகமாக ஆட்டும். வாலின் அடியிலுள்ள சிவப்பு நிறமும் மொழுக்கையான வாலும் எட்டியிருந்து பார்ப்பவருக்குத் தலை போல் தெரியும். இதை எட்டியிருந்து பார்ப்பவர்கள் மற்றொரு தலை என்று எண்ணி ஏமாறுகிறார்கள். இது மிகவும் அமைதியான பாம்பு.

இந்த நஞ்சற்ற பாம்புகளால் நமக்கு எவ்வித தீங்குமில்லை. இதனால் நாம் இப்பாம்புகளை வளரவிடுவது நல்லதல்லவா?

# 12

## நச்சுப் பாம்புகள்

**(Poisonous Snakes)**

''அளவிற்கு மிஞ்சினல் அமிர்தமும் நஞ்சு'' என்பது பழமொழி. நஞ்சு உடலுக்கும் உயிருக்கும் தீங்கை விளைவிக்கிறது. சில செடிகளும், கொடிகளும், நஞ்சின் சக்தியைப் பெற்றுள்ளன. சில பழங்களும் அப்படித்தான். சில பூக்களும் இந்த நஞ்சு வகையைச் சார்ந்துள்ளன. மரங்கள்-செடிகள்-கொடிகள்-பூக்கள்-காய்கள்-பழங்கள் மட்டும்தான நஞ்சினையுடையவை என்று முடிப்பதற்கு முன்பு மனிதர்கள் எப்படிப் பட்டவர்கள் என்ற ஒரு கேள்வியைக் கேட்கத்தான் வேண்டியிருக்கிறது!

மனிதர்கள் கடிக்க வேண்டியதில்லை. நல்ல மனம் அமையாதோர் பார்க்கின்ற பார்வையை நச்சுப்பார்வை என்று கூறுகிறோம். நற்குணமற்றோரைக் கொடுங்குணங் கொண்டோர் என்று கூறுகிறோம். சிலருடைய பார்வையே ''கண்ணேறுபடுதல்'' என்பதால் நோய் பற்றும் என்ற நம்பிக்கை இந்திய நாட்டில் பரவலாக உள்ளது. இதற்கு ஆதாரம் புதியதாகக் கட்டிய வீட்டில் பூசனிக்காய் கட்டித் தொங்கவிடுகிறார்களல்லவா!

''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்று வாயளவிலும், எழுத்தளவிலும்தான் இருக்கிறதே தவிர இன்றுவரை நமது சாதி நம்இனம், நமது ஊர்க்காரர் என்றெல்லாம் பேசி வருவதும் எதைக் காட்டுகிறது? சுயநல நச்செண்ணமே இந்தப் பாகுபாட்டிற்குக் காரணம். சுயநலம், சூதாட்டம், கொலை கொள்ளை, விபச்சாரம் ஏமாற்றுதல், திருட்டு, கற்பழித்தல் ஆகிய அனைத்தும் சமுதாயத்தின் நச்சுப் பழக்கங்களே. பாம்பின் நஞ்சினையும், சமுதாய நஞ்சினையும் ஒப்பிடுகின்றபோது பாம்பின் நஞ்சு எவ்வளவோ மேல். பாம்பின் நஞ்சு ஒரு சில மணித்துளிகளில் தொல்லை தந்து துயர் தந்து முடிவுக்குக் கொண்டு வருகிறது. மனித சமுதாய

நஞ்சோ பரம்பரை பரம்பரைக்கும் கேட்டை விளைவித்து வருகிறது. தாமரைத் திரு. சுந்தரவடிவேலு அவர்கள் லண்டன் தமிழ்ச் சங்கத் தமிழ் விழாவில் 1974ஆம் ஆண்டில் பேசிய போது "மூக்குள்ள வரை சளிவற்ருது! அதே போல் தமிழ்ச் சமுதாயத்தில் குறைகள் இருந்து கொண்டுதான் இருக்கும்" என்ருர்கள். வன்மனம் உடையவர்கள் என்றும் இருக்கத்தான் செய்வர். அதே போல பல ஆயிரக்கணக்கான பாம்புக் கூட்டத் தொகுதியில் ஒரு சில பாம்புகளை நஞ்சினைக் கொண்டவையாக இயற்கை படைத்துள்ளது. இவைகளில் சில மனித உடம்பை அதிகம் பாதிப்பதில்லை. சில நஞ்சின் சக்தி உயிரையே குடித்து விடுகிறது.

பாம்புகளின் நஞ்சினை முக்கியமாக இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று நரம்பு மண்டலத்தை, குறிப்பாக மத்திய நரம்பு மண்டலத்தைத் தாக்கும் நியூரோடாக்ஸின் (Neurotoxin) வகை. இவைகளில் முக்கிய பாம்புகளான நாகங்கள் (Cobras) சாதாரண இந்திய நாகங்கள், கருநாகங்கள், (Black Cobras) பவழப் பாம்புகள் (Coral Snakes) கட்டு விரியன், (Karits), ஆப்ரிக்க நாட்டில் வதியும் மம்பா (Mambas) பாம்புகளும் இந்த நஞ்சின் வகையில் அடங்கும்.

இரண்டாவது வகை ரத்த மண்டலத்தைத் தாக்கும் நஞ்சாகும். இந்த நஞ்சு ரத்தக் குழாய்களைத் தாக்கி, அவைகளில் வெடிப்பை ஏற்படுத்துவதோடு, கடிபட்ட இடத்தின் தசைகளையும் படிப்படியாக அழிக்கும் சக்தியும் படைத்தது. இதற்குப் பெயர் "ஹிமோடாக்ஸின்" (Haemotoxin) நஞ்சு என்று பெயர். இவைகளில் முக்கியமான பாம்பு நம்நாட்டுக் கண்ணுடி விரியன் (Rossell Viper), சுருட்டைப் பாம்பு என்று பெயரிய (Saw Scaled Viper) மலேசிய நாட்டில் வாழும் மலைக்குழி விரியன்கள், வேக்ளர் குழிவிரியன்கள் (Wagler's Pit Viper), கரைக் குழிவிரியன்கள் (Shore Pit Viper), அமெரிக்காவில் அதிகமாகக் காணப்படும் கிலுக்குப் பாம்புகள் (Rattle Snakes) ஆகியவைகளும், இந்த இரத்த மண்டலத்தைத் தாக்கும் நஞ்சினைப் பெற்றவை.

பாம்பின் நஞ்சு அவைகளின் வாழ்விற்கு உறு துணையாக இருக்கின்றது. மற்ற மிருகங்களைக் கொல்லவும், ஆபத்தில் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவும், அவைகளின் உணவினைச் சீரணிக்கவும் துணை செய்கின்றன.

நாகங்களுக்கு அமைந்த நச்சுப் பற்களுக்கும், விரியன் பாம்புகளுக்குமுள்ள பற்களின் அமைப்பில் சிறிது வித்தியாசமுண்டு. நாகங்களின் நச்சுப்பற்கள் அரை அங்குலத்திற்குக் குறைவாகவும்

மெல்லியதாகவும் இருக்கும். விரியன் பாம்புகளின் நச்சுப்பற்கள் அரை அங்குலத்திற்கு அதிக நீளமானதாகவும் அசையும் மேல் தாடை எலும்புகளோடு இணைக்கப்பட்டும் தாடை மூடும் போது கத்தியின் உறை போன்ற தசைப் பகுதியில் உட்புறம் மடங்கி அடங்கிவிடும் முறையில் அமைந்திருக்கும்.

சில ஆண்டுகளுக்கு முன்பு ஆஸ்திரேலியப் பாம்பு நூலொன்றிலிருந்து எடுத்தபடம் ஒன்றை வாசகர்களின் பார்வைக்கு வெளியுட்டுள்ளேன். இப்படம் ஒரு நாகத்தின் தலை அமைப்பையும் நச்சுப்பை, பற்கள் முதலியவற்றையும் தெளிவாகக் காட்டும் படமாகும்.

படத்தில் 'F' என்று குறிப்பிடப் பட்டுள்ளவை Fangs என்று சொல்லப்படும் நச்சுப் பற்களாகும். இவைகள் நடுத்துவாரமுடையவை. இப்பற்கள் 'D' என்று குறியிட்டுள்ள (Duct) நச்சுப் பையோடு இணைக்கப்பட்டுள்ளன. இந்த நச்சுப் பைக்குள் தான் 'V' என்று குறிப்பிட்டுள்ள "Venom Gland" நச்சுச் சுரப்பியுள்ளது. 'P' என்று குறிப்பிட்டுள்ளது 'Palatine Teeth' என்று அழைக்கப்படும் மேலண்ணப் பற்களாகும்: மேல் வரிசையிலும் கீழ் வரிசையிலும் சாதாரணப் பற்கள் அமைந்திருப்பதைக் காண்க. 'T' என்பது (Tongue) நாக்காகும். இந்த நாக்கு முன்புறம் பிளந்து கவைப் போல் இருப்பதையும் காண்க.

பாம்பு வலிய யாரையும் கடிப்பதில்லை. துன்பம் நேரும்போது துயர் வருகிறபோது தப்பிக்கவே கடிக்க முற்படுகிறது.

"துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ இன்பம் சேர்க்க மாட்டாயா?" என்று பாரதிதாசன் பாடினார்.

மனித இனம் துன்புறும் போது, மற்றவரால் துன்புறுத்தப்படும்போது பழிவாங்கவே முற்படுகின்றனர். ஆனால் பாம்புகளோ பழி வாங்குவதில்லை! வேறு வழியின்றிப் பற்களால் கடிக்க முற்படுகின்றன.

இப்படிக் கடிக்கின்றபோது நச்சுப் பற்கள் நச்சுப் பையை அழுத்தும்போது, நஞ்சுச் சுரப்பியிலிருந்து நஞ்சு நச்சுப் பற்களின் வழியாகக் கடியின் வேகத்திற்கு ஏற்றவாறு நமது தசையின் உள்ளே செலுத்தித் தப்பித்து ஓடுகின்றன. பருவமடைந்த பாம்புகள் தாங்கள் தப்பிக்கவே இவ்வாறு செய்கின்றன. பருவமடையாத நாகத்தின் குட்டிகளோ தங்களைத் தற்காக்கும் முறையில் வேகமாகக் கடிப்பதோடு அதிக நஞ்சினையும் மனித உடலில் செலுத்துகிறது. வளர்ந்த நச்சுப் பாம்புகளைவிட, இளம் நாகக் குட்டிகள் எப்போதுமே ஆபத்தை விளைவிக்கின்றன.




Venom apparatus of a snake: from a model in the Australian Museum, Sydney. (V = venom gland; D = venom duct; F = fang; P = palatine teeth; T = tongue.)

இனிப் பொதுவான கொடிய நச்சுப் பாம்புகள் சிலவற்றைப் பற்றி நாம் பார்ப்போம். தமிழகத்தில் மட்டுமின்றி இந்திய உப கண்டத்தின் தலைசிறந்த நச்சுப் பாம்புகள் சிலவற்றையும் மலேய்சியா மற்றும் உலகில் வாழும் சில நச்சுப் பாம்புகள் பற்றியும் இங்குக் குறிப்பிட விரும்புகிறேன்; முதலில் குறிப்பிடத் தக்க சில பாம்புகள் பற்றி இங்குக் குறிப்பிட்டு, நஞ்சற்ற பாம்புகளைப் பற்றித் தனியாக ஒரு பகுதியை எழுதியுள்ளேன்.

**நாகங்கள் Cobras**

நாகங்கள் குறிப்பாக வெப்பநாடுகளில் பரந்து காணப்படுகின்றன. நாகங்களில் பல வகைகள் உண்டு. சாதாரண நாகங்கள் (Common Cobras) கருநாகங்கள் (Black Cobras) ராஜ நாகம் (King Cobra) ஆகியவை தென்கிழக்கு ஆசிய நாடுகளில் குறிப்பாக இந்தியா, பர்மா, தாய்லாந்து, பாகிஸ்தான், சிலோன், தென் சீனு ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

இவையன்றி மொராக்கோவிலிருந்து அரேபியாவரை, ஸாம்பியா உள்ளிட்ட இடங்களில் வாழும் ஈஜிப்ட் நாகங்கள் (Egyptian Cobra) (Naja Haje) பெயர் பெற்றவை.

கென்யாவின் பகுதிகளில் கரு வெள்ளை நாகங்கள் உண்டு. (Block and White Cobra)

சஹாரா பாலைவனத்திற்குத் தெற்கே ஆப்ரிக்க நாட்டில் கருங்கழுத்து நாகங்களும் (Black Necks Cobra), கேப் பகுதியிலிருந்து ரொடிஷியா வரையுள்ள பகுதிகளில் ரிங்ஹால்ஸ் (The Ringhals) என்ற கொடும் நாகங்களும் பயங்கரமானவை. குறிபார்த்து நஞ்சினை எதிரியின் கண்ணில் பாய்ச்சும் பயங்கர நாகங்கள் இந்த நாகங்கள். உருவிலும் நிறத்திலும் குறிப்பாக நாகத்திற்கே உரித்தான படம் எடுக்கும்போது காணப்படும், முன்புற, பின்புற குறியீடுகள் மூலம் இவைகளை வேறுபடுத்தலாம்.

தென்னிந்தியாவில் நல்லபாம்பு என்று அழைக்கப்படும் நாகம் (Naja naja naja) "நாயா நாயா நாயா" என்று அழைக்கப்படுகிறது. இவைகளின் விரிந்த படத்தில் இரு சக்கரமுள்ள படத்தைக் காணலாம். நாயா நாயா கொதியா என்ற நாகம் ஒற்றைச் சக்கரம் உடையதாயும், 'நாயா நாயா ஆக்ஸியானு என்ற வகை நாகங்களுக்கு சக்கர அடையாளமின்றி வெறுங் குறுக்குக் கோடுகள் தென்படும். அஸ்ஸாம் பகுதியில் வாழும் நாகப் பாம்புகளுக்கு விடத்தினைக் கொஞ்ச தூரம் காற்றோடு பீச்சும் சக்தியுண்டு. குறிப்பாக இந்திய நாகப் பாம்புகளில் 'ராஜ நாகம்

தவிர' மற்ற யாவும் நாலரை அடிமுதல் ஐந்தடி நீளம் வரை வளர்பவை.

நான் சிங்கப்பூரில் வாழ்ந்த நாட்களில் நூற்றுக்கணக்கான கருநாகங்களைப் பிடித்துள்ளேன், இவைகள் ஐந்தடி வரை வளர்பவை. இவைகளுக்கு Black Cobra (Naja naja) என்று பெயர். இவைகளின் வயிறு கருநீல வண்ணமாகவும் முதுகுப்புறம் முழுதும் கருநிறமாகவும் இருக்கும். கோபங்கொண்டு படத்தை விரிக்கும்போது கழுத்தின் உட்புறத்தில் இரு வெண்கோடுகள் காணப்படும்.

தொல்லைப் படுத்தும் போது சீற்றம் கொண்டு விடத்தினைக் காற்றோடு பீச்சும் இயல்புடையது இக்கொடிய கருநாகம். இந்த விடம் மூன்று சதுர அடிவரை காற்றோடு பரவும். இப் பாம்பு தற்காப்புக்காகவே இவ்வாறு செய்து தப்பிக்க முயலுகிறது. சிறிய கருநாகக் குட்டிகளோ தயங்காமல் தாக்கி நஞ்சைச் செலுத்தத் தவறுவதில்லை.

1966ஆம் ஆண்டு சிங்கப்பூரில் அலுவலகத்தில் பணி செய்து கொண்டிருந்தபோது என்னுடைய பிரிவில் வேலை செய்து கொண்டிருந்த தொழிலாளி ஒருவர் என்னுடைய அலுவலகத்திற்கு வெளியேயிருந்து "ஐயா ஓடியாங்க!" என்ற குரல் கேட்டு வெளியே ஓடினேன். ஒரு கையில் ஒரு பெரிய பிஸ்கட்டினைப் பிடித்துக் கொண்டு, மறு கையால் கண்ணைப் பொத்திக் கொண்டிருந்தார். "டின்னில் என்ன?" என்றேன். "பாம்புங்க" என்று கூறியபடி கண்ணைப் பொத்திக் கொண்டிருந்த கையை எடுத்தார். அவர் கண் வீங்கி சிவந்து கண்ணீர் சாரை சாரையாகக் கொட்டிக் கொண்டிருந்தது. அந்தத் தொழிலாளி காலையில் காபி குடிப்பதற்குப் பதில் மது அருந்தித்தான் வேலையைத் துவக்குவார்! போதையில் வலி தெரியவில்லை! போதையும் தெளியவில்லை!

"என்ன நடந்தது?" என்றேன். புல் வெட்டிக் கொண்டு இருந்தபோது கருநாகம் திடீரென சீறி எழுந்ததாகவும், அப் பாம்பை விடாமல் பிடித்துக் கொண்டு வரவேண்டும் என்ற பிடிவாதத்தில் கத்தியை இணைத்துள்ள புல்வெட்டும் கம்பால் அருகே சென்று பாம்பை அமுக்க முயன்றபோது புஸ் என்ற சத்தத்துடன் ஏதோ கண்ணில் பட்டதாகவும், கொஞ்சம் தண்ணிரில் கண்ணைக் கழுவி பாம்பையும் விடாமல் பிடித்து அதன் கழுத்தில் கயற்றையும் கட்டி டின்னில் போட்டுப் பத்திரமாகக் கொண்டு வந்ததாகவும் சொன்னர்.

என்னுடைய பிரிவே மருத்துவ மனைப்பிரிவாதலால் உடனே டாக்டருக்கு டெலிபோன் செய்தேன். அவரை மருத்துவமனையில் அனுமதித்துக் கண்ணை நன்ருக கழுவி பதினைந்து நாள் கழித்துத் தான் அவர் கண் குணமாக்கப்பட்டு வெளியேறினர். அந்தத் தொழிலாளிக்கு ஆங்கிலம் பேசத் தெரியாது.

ஒவ்வொரு நாளும் நான் சென்று அவரைப் பார்த்தேன் ''ஐயா! வெள்ளைக்கார டாக்டர் என்ன சொன்னர்?'' என்பார். அவரது கண்ணுக்குக் கட்டுப் போடப் பட்டிருந்ததால் நான் அவருடைய குடியைக் குறைக்க ஒரு தந்திரம் கையாண்டேன்.

கண்ணில் விடம் ஏறியதை முறிக்க மருந்து போட்டுக் கட்டி யிருப்பதாகவும், ஆஸ்பத்திரியைவிட்டு வெளியேறிய பிறகு குடிக்க ஆரம்பித்தால் கண்ணில் போட்ட மருந்துக்கும் குடிக்கும் ஒத்துக் கொள்ளாமல் கண் குருடாகிவிடும் என்று பயமுறுத்தவே ஒரு ஆண்டு முழுதும் அவர் குடிக்காமல் இருந்து மறுபடியும் ஆரம்பித்தார்.

அவர் கண்ணைக் கசக்காமலிருந்ததோடு உடனே அவர் கண்ணைக் கழுவியதால் அவர் கண் காப்பாற்றப் பட்டது. சில சமயம் நாகத்தின் விடம் கண்ணில் அதிகமாகச் சென்று இரத்த தோடு கலக்கும் நிலைபெற்ருல் கண் நிரந்தரக் குருடாகவும் ஆகி விடும்.

இதுபோன்ற கருநாகங்கள் தவளைகளை விரும்பித் தின்னும். கிட்டத்தட்ட ஒருவருடத்திற்கு மேல் இந்த நாகங்களை நான் வளர்த்துள்ளேன்.

தமிழ் நாட்டு நாகங்களுக்கு விடத்தைக் காற்ருேடு துப்பும் அமைப்பில்லை.

நாகங்களின் முக்கிய அடையாளம் விரியும் கழுத்து தசை களே! இந்திய நாட்டில் வேறெந்தப் பாம்புகளுக்கும் இக்கழுத்து விரியும் அமைப்பில்லை.

மலேய்சியா நாட்டில் ஜாஸ்பேர்ட் பூனைப்பாம்பு (Jaspard cat Snake) என்ற ஒருவகைப் பாம்பு சினம் கொள்ளும்போது கழுத்து புடைக்கும் தோற்றமும் நாகம்போல் காட்சி தரும்.

தென் அமெரிக்காவில் ஆறரை அடிவரை வளரும் பாம்பு ஒன்றிற்குப் பெயர் பொய்நாகம் (The False Cobra) என்று பெயர். இது அச்சல் நாகம் போலவே கழுத்து விரியும் இயல்புடையது.

அடுத்து ஆப்ரிக்காவில் ஸஹாராவின் தென்பகுதியில் வாழும் வய்ன் பாம்பின் (The Vine Snake) தோற்றமும் நாகத்தின்

தோற்றம் போலக் காட்சிதரும். ஆனல் இவைகள் நஞ்சற்ற பாம்புகளாகும்,

**ராஜ நாகம் (King Cobra) Hamadryad Naja Hannah. நாயா ஹன்ன.**

நச்சுப் பாம்புகளிலேயே அதிக நீளமான பதினெட்டரை அடி வரை வளரும் பாம்புதான் இந்த நாக அரசஞன ராஜ நாகம்.

மிருகங்களுக்கு அரசஞன சிங்கத்தை மிருகேந்திரன் என் பதைப் போல நாகங்களுக்கு அரசனுக உள்ள இப்பாம்பை நாக அரசன் என்று அழைப்பதில் தப்பில்லை.

அரசனுக்குச் சில சிறந்த குணங்களுண்டு. தோற்றமுண்டு. சிறப்புமுண்டு!

நான் இங்கு வல்லரசுகளைக் கூற விரும்பவில்லை. போட்டா போட்டிக் போட்டுக் கொண்டு மற்ற அரசுகளை அழிக்கும் அரசு கள்தான் வல்லரசுகள்! பகுத்தறிவு உள்ளவர்கள் என்று பெய ரளவில் கூறுகிறவர்கள்—அரசுகள்தான் இன்று உலகத்தை நஞ் சாக்கி ஒரு நொடியில் அழிக்கும் ஆயுதங்களை உற்பத்தி செய்து வைத்துக் கொண்டு மக்களை அழிக்கும் கொடுஞ் செயலில் ஈடு பட்டுள்ளன. பேச்சிலும், செயலிலும் அழிவுதான் முன் நிற்கின்றன. நமது பரம்பரைக்கு "வியட்னும்" ஒரு பாடம்!

ராஜ நாகத்தினிடம் தோற்றமுண்டு. கம்பீரமான பார்வை யுண்டு எதிரிகளால் துன்பம் வரும் என்று சந்தேகிக்கின்ற போது சினங்கொண்டு சீறிஎழும் தன்மையுண்டு. எதை எதை எப் படி செய்ய வேண்டும் என்ற அறிவாற்றலுண்டு. செய் நன்றி மறக்காத தன்மை யுண்டு. தன்னிடமுள்ள நஞ்சின் மூலம் உலகின் கொடும் நோய்களைப் போக்கும் சக்தியுண்டு. அழகுண்டு, அறிவு முண்டு! புராணங்களிலே இடம்பெற்ற புகழுண்டு. கடவுளர் களது கழுத்திலே நடமாடிய பெருமையுண்டு. பழங்கால அரசு களின் செங்கோலிலே கலையுருவில் இடம் பெற்ற சிறப்புமுண்டு. இதனுலேயே ராஜ நாகத்திற்கு நான் சிறப்பான ஒரு இடத்தை இங்கு தந்து அதன் சிறப்பியல்புகளை எழுத விரும்பினேன். ராஜ நாகங்களை இந்தியக் காடுகளிலும், குறிப்பாகத் தென்னக மலைக் குன்றுகளின் காடுகளில் குறிப்பாக வெப்பம் மிகுந்த இடங்களி லும் கேரளாவிலும் காணலாம். தாய்லாந்து—பர்மா—சிலோன்- பிலிபைன்ஸ்-தென்சீன ஆகிய இடங்களில் காணமுடியும்.

ராஜ நாகங்கள் தவிட்டுநிற மஞ்சள், அல்லது கரும்பச்சை வண்ணமுடையதாகவும், முதுகில் கருவெள்ளைக் கோடுடையதாக

நீண்டும் இருக்கும். கண்கள் வெண்கல நிறமும் வட்ட நடுவிழியும் கம்பீரமான தோற்றமும் உடையதாகக் காணப்படும். படம் எடுக்கும்போது தலைக்குப் பின்புறம் இரண்டு அல்லது மூன்று அகண்ட கரு வெள்ளைக் கோடுகள் தென்படும்.

இதன் செதில்களில் வால்புற செதில்கள் பாதி முழுமையாக வும் பாதி இரட்டையாகவும் இருக்கும். இது உலகில் எந்தப் பாம்புக்குமே இல்லாத தனிச் செதில்களின் அமைப்பாகும். குட்டி கள் கருமையாகவும் பெருக்கல் அடையாளம் போன்ற × குறுக்குக் கோடுகள் உடையதாகவும் இருக்கும்.

இந்திய நாட்டில் தென்னகத்தில் பாம்பாட்டிகள் வைத்திருப் பது சாதாரண நாகங்கள். பர்மாவிலோ பாம்பாட்டிப் பெண்கள் இந்த ராஜ நாகத்தைப் பழக்கி ஆட்டுவிக்கின்ற திறனை டெஸ்மாண்ட் மோரிஸ் (Desmond Morris) என்ற பாம்புநூல் வல்லார் குறிப்பிடுகின்றார்.

மலாய்சியாவின் காடுகளில் ராஜ நாகங்கள் காணப்படு கின்றன. தாய்லாந்தின் செஞ்சிலுவைச் சங்கத்தினர் ராஜ நாகங்களிலிருந்து விடம் இறக்கும் ஒரு பெரிய நிலையத்தை நடத்தியும் நூற்றுக்கணக்கான நாகங்களை வளர்த்தும் வருகின் றனர்.

1951இல் சிங்கப்பூரில் ரேஸ் கோர்ஸ் என்ற இடத்தில் பிடிக்கப்பட்ட பெரும் ராஜநாகம் ஒன்றைப்பற்றி உலக உயிர் நூல் பேரறிஞர் டிட்மார்ஸ் குறிப்பிட்டுள்ளார். அதன் பிறகு 1965 வரை சிங்கப்பூரில் ராஜநாகம் இருக்கிறது என்பதற்கு ஆதாரமே இல்லை. 1965ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் சிலேத்தார் நீர்த்தேக்கம் என்ற இடத்தில் நான் ஒரு ராஜ நாகக் குட்டியைப் பிடித்தேன். இது தேசிய கண்காட்சி சாலையில் பதிவு செய்யப் பட்டது. சிங்கப்பூரில் பாம்பாட்டிகள் வைத்துப் பிழைப்பு நடத்துவது சாதாரண நாகப்பாம்புகளே. ராஜ நாகங்கள் அல்ல என்பதை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன்.

ராஜ நாகங்கள் அறிவின் திறன் படைத்தவை என்று குறிப் பிட்டேன். எஞ்சினியர்களுக்கு உள்ள திறமையை ஒத்து இவைகள் வெறும் சருகுகளை இணைத்து இரண்டு அறைகள் கொண்ட குடிலை அமைத்து அடி அறையில் முட்டைகளை இட்டு, மேல் அறையில் ஆண் பாம்பு அல்லது பெண் பாம்பு அடை காக்கும் என்பதை டாக்டர் டுவீடி குறிப்பிட்டுள்ளார். யாராவது இக்கூட்டருகே வந்தால் அவர்களைத் துரத்தும் இயல்பு ராஜ

நாகங்களுக்குண்டு. குறைந்தது முப்பதிலிருந்து நாற்பது முட்டைகளிடும்.

இயற்கையின் படைப்பில் எவ்வளவோ விநோதங்களுண்டு. இவ்விநோதங்களில் எதிரிகளிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள மிருகங்களுக்கு நிறவேறுபாடுகள் உதவுகின்றன. பச்சை ஓணான் இதற்கு ஒரு உதாரணம். "பச்சோந்திப்பயல்" என்று சந்தர்ப்பத்திற்கு தகுந்தாற் போல தங்கள் போக்கினை மாற்றும் கயவர்களைக் குறிப்பிடுவார்கள். தற்காலத்தில் கட்சி மாறுவதும் பச்சோந்தித் தனக் கயமையைச் சேர்ந்தது.

ராஜ நாகங்களுக்கு இயற்கை அமைத்தது வண்ண மட்டுமல்ல. முட்டையிலிருந்து வெளிவந்த தன்னுடைய சொந்தக் குட்டிகளையே தாயும், தகப்பன் பாம்பும் விழுங்க ஆரம்பிக் கின்றன. இந்த விழுங்குதலிலிருந்து தப்பித்த குட்டிகள் தானே இரைதேடி வளர்கின்றன.

ஒரு கிராமத்தில் 1000 பேர் குடியிருப்பதாக வைத்துக் கொள்வோம். அதே கிராமத்தின் காட்டில் 20 ராஜ நாகங்கள் குடிருப்பதாக வைத்துக் கொள்வோம். அவைகள் 800 முட்டை கள் இட்டு அவையாவும் உயிரோடு வெளிவந்தால் அந்தக் கிராமத்தையே அவைகள் கடித்து அழிக்க முடியுமல்லவா?

இந்த அழிவினைக் காக்கவே இயற்கை ராஜ நாகத்தையும் படைத்து அவைகளின் குட்டிகளை அதன் பெற்றோரான நாகங் களே தின்று அழிக்கும் குணத்தையும் படைத்திருக்கிறது.

அதோடு ராஜ நாகங்களுக்கு முக்கிய உண(3வ மற்றைய பாம்புகள்தான் என்பதைக் குறிப்பிட வேண்டும்.

ராஜ நாகங்களின் நஞ்சு கொடுமையானது. இதே வகை யில் கொஞ்சம் அதிகக் கொடுமையான நஞ்சைக் கொண்டவை கிட்டத்தட்ட எட்டு அடிவரை வளரும் பச்சை மம்பா பாம்பு களும் (Green Mamba) கரும் மம்பா பாம்புகளுமாகும் (Black Mamba). இவைகள் அதிக வேகமானவை. மனித இனத்தைத் தாக்கும் வல்லமையும் படைத்தவை. அதோடு ஆஸ்த்திரேலியா வில் வாழும் 3அடி நீளத்திற்குக் குறைவானதும் பன்னிரெண்டு குட்டிகளை ஈனுவதும் ஆன கொல்லும் ஆட்டர் (Death Adder) என்ற பாம்புகளும் ராஜநாகங்களின் விடசக்தியைக் கொண் டவை.

நியுரோடாக்ஸின் என்ற நரம்பு மண்டலத்தைத் தாக்கும் நஞ்சினைக் கொண்டவைகள்தான் நாகங்களும், ராஜ நாகமும், ஆட்டர் பாம்பும் மம்பாக்களும். ராஜ நாகம் கடிக்கின்றபோது

கிட்டத்தட்ட 12 சொட்டுகள் நஞ்சினை ஏற்ற முடியும். ஆனால் கடிக்கின்றபோது உடம்பை மூடியிருக்கும் துணியில் கடித்தால் துணி நஞ்சினால் நனைக்கப்பட்டு எஞ்சிய நஞ்சு கடிவாய் வழியே முழுதும் செலுத்தப் படாமல் ஒரு சிறிதுதான் உட்செல்லும்.

"ஒரு குடம் பாலுக்கு ஒரு துளி விஷம்" என்பதற்கேற்ப கடிபடுபவர் மிகவும் அதிர்ச்சியுற்றாலோ அல்லது பரபரப்படைந்தலோ விஷம் தன் சக்தியை நிலை நிறுத்திவிடும். மன உறுதியுள்ளவர்களை விடம் அவ்வளவு பாதிப்பதில்லை.

திரு கிராம்டன் (Mr Crompton) அவர்கள் எழுதிய 'பாம்பு' என்ற நூலில் மிகச்சிறந்த மனோதைரியமும் தன்னம்பிக்கையும் கொண்ட டாக்டர் எய்ஸன் பர்கர் (Dr Eizen Berger) ஆப்ரிக்க நாட்டு மிகக் கொடிய பாம்புகளில் ஒன்றான 'பச்சைமம்பா' என்ற பாம்பின் நஞ்சினைத் தன் உடலில் ஏற்றி விஷப்பரீட்சை நடத்திய பயங்கர சம்பவத்தை விவரிக்கின்றார்.

டாக்டர் எய்ஸன்பர்கர் ஒரு துளி பச்சை மம்பா விஷத்தை எடுத்து அதோடு 10 துளி தண்ணீர் சேர்த்து விஷத்தைப் பலவீனமாக்கி அந்தக் கலவையிலிருந்து 0.2 cc என்ற மிகமிகக் குறைந்த அளவை தன் முன்கையில் ஊசி மூலம் ஏற்றிக் கொண்டார்.

ஊசி குத்திய உடனே உடம்பெல்லாம் தீப்பற்றி எரிவது போன்ற உணர்வும் வளர ஆரம்பித்தது. ஊசி குத்திய இடம் வீங்கி ஐந்து நிமிடத்திற்குள் குத்திய இடத்தில் அரிப்பும் தன்னுடைய நரம்புகள் பாதிக்கப்படுவதையும் உணர்ந்தார். சாதாரண ஒலி எல்லாம் பேரொலி போல உணர்ந்தார். தன்னுடைய காரின் டயர் வெடித்தது போன்று உணரவே வெளியே காரைவிட்டு இறங்கிப் பார்க்க டயர் நன்றாக இருப்பதைக் கவனித்தார்.

திடீரென்று அவர் வாயின் வழியாக நுரை தொடராகத் தள்ள ஆரம்பிக்கவே, வெறியுணர்வு தலைதூக்க ஆரம்பித்தது. நம்பிக்கையைப் பாழாக்காத டாக்டர் இந்த விஷப்பரீட்சைக்கு முற்றுப்புள்ளி வைக்க முடிவு கட்டும் வகையில் மேல் கையில் ஒரு கட்டைக் கட்டி, ஊசி குத்திய இடத்தைக் கீறி பொட்டாஸியம் பர்மாங்கனேட் தூளைத் தேய்த்தார். பலனில்லை.

தாடை, உதடு, நுனி, நாக்கு ஆகியவை மரமரப்பாகத் துவங்கி பிறகு இந்த மரமரப்பு முகம் முழுதும் பரவி தொண்டை வரை பரவியது. அடி நாக்கும் கண்களும் வலி எடுக்க ஆரம்பித்து கைவிரல்களும் கால்களும் வலுவிழந்தன. தொண்டையும் நாக்கும் வீங்க ஆரம்பித்தன. பேசவோ, விழுங்கவோ முடியாத நிலை

பிறந்தது. மூச்சுத் திணற ஆரம்பித்தது. இவ்வளவும் பதினைந்து நிமிடத்திற்குள் நிகழ்ந்து விட்டன.

தான் கீழே விழப்போகிறோம் என்பதை உணர்ந்த டாக்டர் மற்றொரு ஊசியில் ஸ்டிக்னைன் (Steychnine) என்ற மருந்தை உடம்பில் செலுத்தவே, அவருடைய இரத்த ஓட்டம் புத்துயிர் பெற்றது.

ஐந்து மணி நேரங்கழித்துப் பிறகும் கை வீங்கியது, மரத்துப் போன இடம் தொட்டாலே வலிக்க ஆரம்பித்தது. நேரம் ஆக ஆக உடல் முழுதும் வலி இருந்தது. டாக்டர் காய்ச்சல் உணர்வோடும் வலியோடும் படுக்கைக்குச் சென்றார். காலையில் நாக்கு முதலிய இடத்தில் வலி இருந்தும் ஓரிரு நாட்களில் பூரண குணம் பெற்றார். நரம்பு விஷத்தை மாற்று மருந்து மூலம் குணப்படுத்த முடியும் என்பதை இச்சோதனை மூலம் உறுதிப் படுத்தினர். விஷத்தின் தன்மையும், விளைவும் எத்தனை கொடியது என்றாலும் பூரணகுணம் பெற முடியும். ஆனால் ரத்த மண்டல விஷத்தை யுடைய விரியன்களின் கடிக்கு நிரந்தரமாகக் குணம் கிடைக்கும் என்பது ஐயமே என எழுதியுள்ளார் கிராம்ப்டன்.

**கட்டு விரியன் (Kraits, Genus Bungarus)**

மலேய்சியா சிங்கப்பூரில் மூன்று வகைக் கட்டுவிரியன்கள் உள்ளன. தமிழ்நாட்டில் ஒருவகைக் கட்டு விரியனும், வட நாட்டில் கொஞ்சம் வண்ணம் சிறிது மாற்றமுடைய கட்டு விரியன்களும் உண்டு.

கேரளாவில் இந்தப் பாம்பை "எட்டடி மூர்க்கன்" என்பார்கள். தமிழ்நாட்டிலோ எட்டடி விரியன் என்பார்கள். முழு வளர்ச்சியடைந்த பாம்புகள் ஏழு அடிவரைதான் வளரும். அதிகப் பருமன் இருக்காது.

விரியன் பாம்புகளின் தலையமைப்பும் கழுத்தமைப்பும் இதற்கில்லை. செதிலமைப்பும் வாலமைப்பும் மாறுபட்டது. விஷத் தன்மையும் மாறுபட்டது.

**மலாயாக் கட்டுவிரியன் (Malayan Krait, Bungarus Candidos)**

மலாயாக் கட்டுவிரியனுக்கும் தமிழ் நாட்டுக் கட்டுவிரியனுக்கும் வண்ணம் உருவ அமைப்பில் மாறுபாடு இல்லை என்றே சொல்லமுடியும். கழுத்தும் தலையும் ஒரே சுற்றளவு உள்ளதாக இருக்கும். தலை கருத்து கீழ்த்தாழ்வாயில் வெண்மை நிறமுடைய செதில்கள் இருக்கும். உடல் முழுதும் கிட்டத்தட்ட



இந்தியக் கட்டுவிரியன்

முப்பது வெண் வளைய பட்டை போன்ற செதில்களோடு இடையில் கருப்புச் செதில்கள் வளையம்போல் அமைந்திருக்கும். Subcaudals என்று சொல்லப்படும் வயிற்றுச் செதில்கள் முழுமையானதாக இருக்கும். வால் கூர்மையாக இல்லாது முனை மழுங்கிக் காணப்படும். கிட்டத்தட்ட நான்கடி வரை வளரும். இந்தியக் கட்டுவிரியன்கள் பங்காரஸ் கெருலியஸ் "Bungarus Caeruleus" இனத்தைச் சேர்ந்தவை. கிட்டத்தட்ட ஏழு அடிவரை வளரும்.

இவைகள் காடுகளிலும் புதர்களிலும் காய்ந்த சருகுகள் குச்சிகளுக்குகிடையே கிடக்கும் போது கண்டுபிடிப்பது கடினம். மிகவும் சாந்த சொரூபிகள், 'சாது மிரண்டால் காடு கொள்ளாது' என்ற பழமொழியைப் போலத் தன்னை யாராவது மிதித்து விட்டால் மட்டுமே கடிக்கும்.

ஆனால் இதன் நஞ்சு (நரம்பு நஞ்சு) நாகப் பாம்பின் நஞ்சினை விட நான்கு பங்கு சக்தி படைத்தது. இதனால் கடிபட்டவருக்கு உடனே சிகிச்சை அளிக்காவிட்டால் மீள்வது கடினம்.

இது இரவில் இரைதேடும் மிருக வகையைச் சார்ந்தது. முட்டையிட்டு அடைகாத்துக் குட்டி வெளிவரும். இதுவும் மற்ற பாம்பு தின்னி வகைதான். இருப்பினும் தவளை, பல்லிகளையும் கிடைத்தால் விடாது.

Lycodon என்று சொல்லப்படும் வெள்ளிக் கோல் வரையன் பாம்பினை (Wolf Snake) கட்டுவிரியன் என்று நம்பி ஏமாறுபவர் உண்டு. கட்டுவிரியனுக்குத் தலையில் வெண்பட்டைக் கோடுகளில்லை. வெள்ளிக் கோல் வரையனுக்குத் தலையில் பட்டைகள் உண்டு. அகண்ட இடைவெளியின் இடையேதான் இப்பட்டைகளுண்டு. நிறத்திலும் செந்தவிட்டு நிறம். ஆகவே வெள்ளிக் கோல் வரையனை நாம் தொல்லைப் படுத்தத் தேவையில்லை. மற்றும் மலேய்சியாவில் செந்தலைக் கட்டுவிரியன் வகையும், பட்டைக் கட்டுவிரியன் (Banded Krait) என்ற வகையும் உண்டு. பட்டைக் கட்டுவிரியன் ஏழு அடி வளரும். உடல் முழுதும் வெள்ளைப் பட்டைக் கோடுகளுக்குப் பதில் மஞ்சள் பட்டைக் கோட்டுச் செதில்கள் உண்டு.

**பவழப் பாம்புகள் (Coral Snakes, Genus Callophis)**

பவழப் பாம்புகளும் நாகத்தின் நஞ்சின் சக்தியைக் கொண்டவை. இவை சிறிய பென்சிலைப் போன்றவை. ஒரு சில கொஞ்சம் பருமன் அதிகம்: 18 அங்குலம் முதல் இரண்டடி வரை வளரும் நிலவாழ் பாம்புகள். பலர் கருதுவது போல

இவைகள் பவளப் பாறைகள் உள்ள தண்ணீரில் வசிப்பவை அல்ல.

பொதுவாக இவைகளுக்கு முதுகுப் புறம் செந்தவிட்டு நிறமும் பக்கவாட்டில் தலைமுதல் வால்வரை கருங்கோடு அல்லது சிவப்புக் கோடும் இருக்கும். வயிற்றுப் புறம் கருமையும், வெண் மையுமுள்ள பட்டைச் செதில்களுடன் வால்புறம் சிவப்பாகவும் தலையும் கழுத்தும் ஒரே பருமனுகவும் இருக்கும். ஐரோப்பிய பாம்புகள் முதுகுப்புறம் சிவப்பு வெள்ளை அல்லது மஞ்சள் பட்டைச் செதில்களுள்ளவை.

மலேசியா சிங்கப்பூரில் 6 வகை பவழப் பாம்புகள் உண்டு. சர்வசாதரணமாக புதர்களில் இவைகள் காணப்படும். இவை களின் வாய் சிறியது. கண்களும் மிகச் சிறியது. இவைகள் விரல்களுக்கு இடையிலுள்ள தசையின் பாகத்தில்தான் கடிக்க முடியும். விஷம் அவ்வளவு கொடியதல்ல. இருப்பினும் கடித் தால் விஷம் நரம்பு மண்டலத்தைத் தாக்கும். தமிழகத்தில் குன்றுகள் பகுதியில் இவைகளைக் காணமுடியும். நான் நூற்றுக் கணக்காக இப்பாம்புகளைப் பிடித்துள்ளேன். ஆனுல் இவை களை வளர்ப்பது கடினம்.

மலேசியாவில் உள்ள நீலமலாயா பவழப் பாம்புகள் ஐந்தடி வரை வளரும். 1965இல் இப்பாம்பினைப் பற்றி திரு ஆர். பி. மெக்ரோகார் எழுதியிருப்பதில் இப்பாம்பினுல் கடியுண்ட இரண்டு வயதுக் குழந்தை இரண்டு மணிநேரத்தில் இறந்து விட்டதாக எழுதியுள்ளார்.

1968இல் என்னேடு பணிபுரிந்த வெள்ளைய நண்பரொருவர் பினுங்கில் கடிபட்டார். கை பலூன் போல் வீங்கி வலியால் துன்பப்பட்டு மருத்துவ சிகிச்சைக்குப் பிறகு குணம் பெற்ற தாகவும், ஆனுல் கைவீக்கம் வடிய ஆறுநாட்கள் ஆனதாகவும், இரண்டு நாட்கள் சுய உணர்வின்றி இருந்ததாகவும் குறிப் பிட்டார்.

ஆகவே நியூரோ டாக்ஸின் விடங்கொண்ட நாகங்கள், கட்டுவிரியன்கள், ஆடர் பாம்புகள், மம்பாப் பாம்புகள், ராஜ நாகம், பவழப் பாம்புகளோடு இப்பகுதியை முடித்து, இனி இரத்த மண்டலத்தைத் தாக்கும் விரியன் வகைகள் பற்றிப் பார்ப்போம்.

13

# விரியன் வகைகள்

**Vipers (Viperidae)**

இந்த விரியன் குடும்பம் உலகின் பல பாகங்களில் பரவி யுள்ள குடும்பம். மடகாஸ்கர், ஆஸ்திரேலியப் பகுதி தவிர மற்ற பகுதிகளில் குறிப்பாக ஆப்ரிக்காவில் மிக அதிகம். இவைகளின் தலை அமைப்புச் செதில்களும், தலை அமைப்பும், கழுத்தமைப்பும் மற்றைய பாம்பு இனங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டும். மற்றைய பாம்புகளுக்குத் தலையில் பட்டைச் செதில்களுண்டு. விரியன்களுக்கோ செதில்கள் சிறிதாகவும் கழுத்து குறுகியும் தலைப் பருத்தும் இருக்கும். முனை கூம்பிய மண்வெட்டி போல இருக்கும், கண்ணுக்கும் மூக்குத் துவாரத்துக்கும் இடையே லோரியல் பள்ளங்கள் (Loreal Pit) ஒரு சிலவற்றிற்கு இருக்கும். இப்பள்ளங்கள் பற்றி முன்னைய பகுதியில் குறிப் பிட்டுள்ளேன். பெரும்பாலான விரியன்கள் குட்டிபோடுபவை. ஒரு சிலதான் முட்டையிடுபவை.

குழியற்ற விரியன்களில் குறிப்பிடத்தக்கவை ஐரோப்பிய நாடுகளில் வாழும் ஆட்டர் (Adder) பாம்புகள், வட இத்தாலியில் காணப்படும் மண் விரியன் (Sand Viper) ஆஸ்ப் விரியன் என்று (Asp Viper) அழைக்கப்படுr. ஆஸ்ப் விரியன் ஜெர்மனி, இத்தாலி, பிரான்ஸ், ஆகிய நாடுகளில் வாழ்பவை. இவை ஆப்ரிக்காவிலும் அரேபியாவிலும் காணப்படும். கொம்புள்ள ஆஸ்ப் விரியன் (The Horned Asp), பப் ஆட்டர் (Puff Addar), இரவு விரியன் (Night Addar), காபூன் விரியன் (Gaboon Viper), தென்கிழக்கு ஆசிய நாடுகளில் குறிப்பாக இந்திய, மலேய்சியப் பகுதியில் வாழும் கண்ணாடி விரியன் (Russel's Viper) சுருட்டைப் பாம்பு (Saw-Scaled Viper) ஆகியவைகளும் குழியற்ற விரியன் களில் அடங்கும். மேற்கண்டவற்றில் குறிப்பிடத்தக்க ஒன்றி ரண்டைப் பற்றி மட்டும் இங்குக் குறிப்பிட்டுள்ளேன்.

1958ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் எனக்குப் பாம்புகள் மேல் பற்று வளர்ந்தது.

**கண்ணாடிவிரியன் (Russell's Viper)**

எனக்கு எட்டு வயதிருக்கும். 1938ஆம் ஆண்டு என்று எண்ணுகிறேன், நான் எனது கிராமமான திருப்பாலக்குடியில் படித்து வந்தேன். எங்கள் குடும்பம் அப்போது பணக்காரக் குடும்பம். எனது தந்தையார் ஒருவர்தான் அந்தக் கிராமத்தில் சைக்கிளும், கூண்டு வண்டியும் வைத்திருந்தார். அவர் தொழில் கட்டிடங்கள், பாலங்கள் கட்டும் தொழில். அவருடைய பெயரே காண்ட்ராக்டுக்காரர். வீட்டின் பெயரோ கண்ட்ராக்டுக் காரர் வீடு!

எல்லோரையும் போல என்னையும் பள்ளிக்கு அனுப்பினார்கள். சிறிய தவறுக்கும் கடுமையான தண்டனை கொடுப்பவர் எனது தந்தையார் அவர்கள். வசதியுண்டு, வாழ்வுண்டு. ஆனால் சேர்க்கை தோஷம் என்று சொல்வார்களே அதுபோல எங்கள் வீட்டில் எவ்வளவோ மாமரங்கள் இருந்தும் எனது தந்தையாருக்குத் தெரியாமல் அதிகாலையில் எல்லோருக்கும் தெரியாமல் மற்றவர் தோட்டத்திலுள்ள மாம்பழங்களைப் பறித்துத் தின்னக் கிளம்பிவிடுவேன்.

ஆம்! "எல்லோரும் போனாற்போலே நானும் போனேன் மாங்காத் தோப்பு" என்று நானும் போனேன். இருட்டில் காலையும் கையையும் தரையில் மாற்றி மாற்றித் தடவி மாம்பழம் தட்டுப்பட்டவுடன் பொறுக்கித் தின்றதுபோகப் பாக்கியைத் துணியில் கட்டிக்கொண்டு வருவேன். இம் மாம் பழத் திருட்டில் நாங்கள்-பிள்ளைகள் மட்டுமல்ல! வயது வந்த பெரியவர்களும் உண்டு!

ஒருநாள் நிலா வெளிச்சம் மறையவில்லை. மாமரத்தடியில் இருட்டு. நாங்கள் மூன்று பேர். திடீரென சங்கொலி போன்ற சத்தத்துடன் யாரோ ஓடுவது போன்று சரசரவென்ற சத்தம். பதுங்குவதா ஓடுவதாவென்று திக்குமுக்காடினோம். இருப்பினும் மாமரத்தை விட்டு நகர்ந்தோம். மாமர அடியை விட்டுச் சத்தம் அருகிலுள்ள வயல் வெளிக்கு மாறியது. பள பள வென்று கண்ணாடி மின்னுவது போன்ற ஒளியோடு பெரும் பாம்பு சத்தத்துடன் நகர்வதைக் கண்டோம். எங்கள் தொழிலில் தானும் பங்குகொள்ள வந்த பெரியவர் ஒருவர் "கண்ணாடி விரியன்டா!" என்று ஓட்டம் பிடித்தார். நாங்களும் தலைதெறிக்க ஓடி வீட்டை அடைந்தோம்.



கண்ணாடிவிரியன்



ராட்டில் பாம்புகளின் வாலமைப்பு

"நெஞ்சம் மறப்பதில்லை! நினைவுகள் நீங்குவதில்லை!"

டிட்மார்ஸ், கிராம்ப்டன் ஆகியவர்கள் எழுதிய நூல்களில் கண்ணாடி விரியனைப்பற்றிப் படித்தபோது பழைய நினைவுகள் வந்தன. அவைகளை வடித்தேன். அந்தப் பாம்பை நான் அப்போது மிதித்திருந்தால், அந்தப் பாம்பு என்னைக் கடித் திருந்தால், வாசகர்களுக்கு நான் இந்தப் பயங்கர நிகழ்ச்சியை நூல் வடிவில் காட்டியிருக்க முடியாது!

நாக வகைகளில் நாகராசன் எப்படிப் பெயர் பெற்றதோ, அதேபோல விரியன் வகையில் கண்ணாடி விரியன் கொடும் நஞ்சில் பெயர் பெற்றது. மூர்க்கத்தனமானது. நாற்பது முதல் ஐம்பது வரை குட்டிபோடும். எலி, தவளை, பல்லி ஆகியவை இதன் முக்கிய உணவுகள். இது விரியனுக்குள்ள தலை யமைப்பை உடையது. உடல் முழுதும் பட்டை பட்டையான கண்ணாடி போன்ற கருஞ் செதில்களுடையது. பக்கவாட்டில் உள்ளவற்றைவிட முதுகுப்புறம் வட்ட வடிவச் செதில்கள் பெரி தாக இருக்கும். செம்மண் நிறத்தோடு கருஞ்சிவப்பு நிற உடம்பு அது வாழும் இடத்திற்கு ஏற்றமுறையில் அமைந் திருக்கும். வயிற்றுப்பக்கச் செதில்கள் முழுமையாகவும், வால் புறச் செதில்கள் இரட்டையாகவும் இருக்கும். அகன்ற கண்க ளோடு ஐந்தடி வரை வளரும். சில இடங்களில் ஆறடி வரை வளரும் பாம்புகளுமுண்டு.

நச்சுப் பல் நீண்டு கூர்மையாகவும் துவாரமுடையவை யாகவும் இருக்கும். அடுத்த பற்கள் சிறிதாக இருக்கும். இந்நச்சுப் பற்கள் முறிந்தால் அடுத்த பல் உடனே முளைத்து விடும். இப் பாம்பின் விசேட பல் அமைப்பில் இது குறிப்பிடத் தக்கது.

சருகுகளிலும் பொந்துகளிலும் வயல் வரப்பு வளைகளிலும், காடுகளிலும், சருகுகள் கொட்டப்பட்டுள்ள குப்பை மேடு களிலும் இவை காணப்படும்.

இவைகளின் கொடும் நஞ்சினைப் பற்றியும் கடி பற்றியும் பாம்பு நூல் வல்லார் எழுதிய சுவையான சம்பவங்கள் இங்குக் குறிப்பிடத்தக்கவை.

திரு கிராம்ப்டன் அவர்கள், இந்திய மண் நூல் ஆய்வு நடத்திய திரு சிலேட்டர் என்பவரைப்பற்றிக் குறிப்பிட் டுள்ளார். சிலேட்டர் பாம்புப் பிரியர். நிறையப் பாம்புகளைப் பிடித்தவர். காலில் முழங்கால் வரை சப்பாத்து அணிந்துதான்

மண்ணுய்வு நடத்துவார். அயர்ந்து கொண்டிருந்த கண்ணுடி விரியன் தலையை லேசாக அழுத்திக்கொண்டு அதைப் பிடிக்க முயன்றதும், அது அவர் காலைச் சுற்றிக்கொண்டது. காலில் தான் ரப்பர் சப்பாத்து அணிந்திருக்கிருேமே என்று காலை எடுத்ததும் விரியன் சீறிக்கொண்டு முழங்காலுக்கு மேல் கடித்தது. சிலேத்தர் சுருண்டு விழுந்தார். மருத்துவ உதவி உடனே அளிக்கப்பட்டும் அவர் உயிரை மீட்க முடியவில்லை,

ஆசிய நாட்டில் கிட்டத்தட்ட நாற்பது வகை விரியன் களுண்டு. இந்திய நாட்டில் உள்ள இரு விரியன்களில் பூர்ஸா (Phoorsa) என்பதும் மிகக் கொடும் நஞ்சைக் கொண்டது. இவை வடநாட்டில் அதிகம். இதைப்பற்றி நான் அதிகம் அறிய முடியவில்லை.

1790ஆம் ஆண்டு டாக்டர் பாட்ரிக் ரஸ்ஸல் அமரத்துவம் அடைந்துவிட்டார். அவர் கண்டுபிடித்த பாம்புக்கு அவர் பெயரை இட்டார். அவர் அமரத்துவம் அடைந்தாலும் கண்ணுடி விரியன் உள்ளவரை அவர் பெயர் நிலைத்து நிற்கும்.

தமிழ் நாட்டிலுள்ள உழவன்பாம்பையும், மலைப்பாம்புக் குட்டியையும் கண்ணுடிவிரியன் என்று தவறுதலாக எடுத்துக் கொள்ளாமல் இருக்க ஒரே வழி மேற்கண்ட பாம்புகளின் தலையமைப்பையும் தலைச் செதிலமைப்பையும் உற்று நோக்கிச் சந்தேகத்தை நீக்கிக் கொள்வதுதான்.

**சுருட்டைப் பாம்பு (Saw Scaled Viper) Echis Carinatus**

கண்ணுடி விரியன் பகுதியில் எனது இளமையில் நிகழ்ந்த நிகழ்ச்சி யொன்றை எழுதியிருக்கிறேன். மற்ருெரு நிகழ்ச்சி என்னுடைய 13ஆம் வயதில் நடைபெற்ற தொடர் நிகழ்ச்சி யாகும். நான் மன்ஞர்குடியில் தங்கிப் படித்துக் கொண்டிருந் தேன். எனது தந்தையார் தனியே ஒரு வீடு எடுத்துக் கொடுத் தார். அதில் நானும் எனது தங்கைகள் இருவரும் படித்து வந்தோம். எங்கள் கிராமத்திற்கும் மன்னைக்கும் ஐந்து மைல் தொலைவுதான்.

வாரமுடிவில் எனது கிராமத்திற்குச் செல்வது வழக்கம் அங்கு எனது தந்தையாரிடம் வேலை செய்தவர்களில் ஒட்டர்கள் என்பவர்கள் அதிகம். அவர்கள் உணவிற்காக வெள்ளை எலிகளை வளைகளை வெட்டிப் பிடிப்பார்கள். ஒரு கலயத்தில் சவுக்குச் செத்தையை அமுக்கி அடிப்பாகத்தில் ஒரு துவாரமிட்டு வாய்ப் பாகத்தை வளைகளின் வாயில் வைத்து புகை வெளியே போகாமல்



~~விரியன் தலை~~

மலைப்பாம்பின் தலை.

ஊதுவார்கள். எலிகள் புகை தாங்காமல் 'புடை' என்ற துவாரம் வழியாகப் புடைத்துக்கொண்டு வெளியே ஓடும். அதை அடிப்பார்கள், அல்லது கலயம் அமைக்கப்பட்ட வாய்ப் பாகத்தில் வந்து மயங்கிக்கிடக்கும். அதைப் பிடிப்பார்கள்.

வெள்ளெலி காசநோய்க்கு நல்லது என்று அப்போது அவர்கள் கூறுவதைக் கேட்டிருக்கிறேன்.

எனக்கும் எலிபிடிக்க வேண்டும் என்ற ஆவல்! என் தந்தைக்குத் தெரிந்தால், புளிய மிளாற்றினால் அடித்துப் பின்னிவிடுவார் என்பது தெரிந்தும், அவருக்குத் தெரியாமல் எலி வேட்டைக்கு எனது நண்பன் ருத்திராபதி என்பவனோடு கிளம்பினேன். கலயம் தயார் செய்து, மண் வெட்டியுடன் சவுக்குக் காடுகளின் வேலிகளில் வேட்டையைத் துவக்கினோம். சில நாட்களில் எலிகளை அடிதோம். ஒரு நாள் கள்ளி வேலிப்பக்கம் இருந்த வளையை வெட்டி கலயம் வைத்து புகையை ஊதினோம். எலிவரவில்லை. கலயத்தை வெளியில் எடுத்து வளையில் கையைவிட எத்தனித்த சமயம் 'புஸ்' என்ற சத்தம்! ஒரு அடி நீளத்தில் உக்கிரமாக ஒரு பாம்பு சீறியது. அதோடு ஓட்டம் பிடித்தேன். ருத்திராபதி அந்தப் பாம்பை அடித்து எனது வீட்டிற்கு கொண்டு வருவதற்கும் எனது தந்தையார் வீடு வருவதற்கும் சரியாக இருந்தது. எனது தாத்தாவும், சிற்றப்பாவும், இது புடையன் பாம்பு என்று கூறினார்கள். ருத்திராபதியையும், என்னையும் கட்டிவைத்து புளிய மிளாற்றினால் எனது தந்தையார் அடித்தார். அந்த நிகழ்ச்சியோடு எலி வேட்டையில் ஆரம்பித்த பாம்பு வேட்டை முடிந்தது.

அதன்பிறகு நான் 1976இல் சென்னையில் பாம்புப் பூங்காவில் தான் இந்த சுருட்டைப் பாம்புகளை அருகிலிருந்து படம் எடுத்தேன்.

திரு கிராம்டன் அவர்கள் எழுதியதில் இப்பாம்புகளைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'It is a small snake but that small body contains plenty of wickedness. அது சிறிய பாம்புதான். ஆனால் அதன் சிறிய உடல் முழுதும் கொடுமை நிறைந்தது' என்று குறிப்பிட்டுள்ளார். அதன் கடி பயங்கரமானது என்றும், கூட்டில் அடைத்து வைத்திருந்தாலும் அருகில் போவோரைத் தாக்க முயற்சிக்கும் என்றும் கூறியுள்ளார்.

தமிழ் நாட்டில் இவைகள் சர்வ சாதாரணமாகக் காணப்படுபவை. வேலிகள், காடுகளில் இவை அதிகம். குறிப்பாக எலி

வலைகளில் புகுந்து சிறிய சுண்டெலிகளை விழுங்கும். ஆப்ரிக்காவிலும், பர்மா, சிலோன் ஆகியவைகளில் இவைகள் அதிகம்.

இப்பாம்புக் கடியினுல் கடிபட்டவர் துவக்கத்தில் குணப்படுத்தப் பட்டாலும் இதன் கடியினுலும், கண்ணுடி விரியனின் கடியினுலும் கடிபட்டோரின் இரத்தக் குழாய்கள் வெடிபட்டு வியர்வைத் துவாரங்கள் வழியாக ரத்தம் கசியும். கடிபட்ட இடம் சிவந்து வீங்கித் தசைகளே விடத்தின் சக்தியால் நொந்து கரைவதும் உண்டு. சில பேருக்கு இந்த இரத்தக் குழாய்கள் வெடித்துச் சரியாக சீர்பெருமல் உடலில் அரிப்பு நோய் போல் வந்து நீண்ட நாட்கள் அவதிப் படுவோரும் உண்டு.

ஐரோப்பிய நாடுகளில் குறிப்பாக எங்கள் நாடான இங்கிலாந்தில் காணும் ஒரே விரியன் வகைக்கு ஆட்டர் (Adder) என்று பெயர். இதன் விஷம் அவ்வளவு கொடுமையானதல்ல. மற்ற இரு பாம்புகள் ஸ்மூத் பாம்பு (Smoothe Snake) புல் பாம்பு (Grass Snake) ஆகியவை இரண்டும் விஷமற்றவை.

**குழிவிரியன்கள் (Pit v:pers) Crotolinae**

விரியன் பாம்புகளில் குறிப்பாக விரியன்களிடம் அமைந்துள்ள லோரியல் குழிகள் என்ருல் என்ன என்றும், அது எப்படிநவீன ரேடார் கருவிகளை யொத்து, வெப்ப உணர்வுகளைக் கிரகித்து பாம்புகளின் உணவுப் போராட்டகளை எவ்வாறு சுலபமாகத் தீர்க்கிறது என்றும் பாம்பின் வியத்தகு குணங்கள் என்ற தலைப்பில் எழுதியுள்ளேன்.

இப்பகுதியில் நான் குழிவிரியன்களின் உருவ அமைப்பை விளக்கத் தேவையில்லை. விரியன்களின் தலை அமைப்பும், செதில் தலை அமைப்பும் கழுத்தமைப்பும் உங்களுக்குத் தற்போது தெரியும்.

குழிவிரியன்களில் மேலை நாடுகளுக்கு ஒரு குழி விரியனும் கீழை நாடுகளுக்கு ஒரு குழி விரியனும் குறிப்பிடத் தக்கவை.

"எங்கள் குடும்பம் பெரிசு" என்று சொல்லுமளவிற்கு வட அமெரிக்காவில் உள்ள "கிலு கிலுப்பை"ப் பாம்பு என்று அழைக்கும் கிழக்கு வைர கிலுகிலுப்பைப் பாம்பு - (ஈஸ்ட்டர்ல் டயமண்ட் ரேட்டில் ஸ்நேக் (The Eastern Diamond Rattle Snake, Crotolus Adamanteus) அமெரிக்காவின் புகழ்பெற்ற பாம்பாகும். உலகிலுள்ள மற்ற இடங்களில் வாழும் குழிவிரியன்கள் குடும்பமே இந்த ராட்டில் பாம்பின் இனமான குரோடாலஸ் குடும்பத்தின் பெயரைத்தான் பெற்றுள்ளன.



சுருட்டைவிரியன்



குழிவிரியன்

தேவர் குடும்பம், முதலியார் குடும்பம், பிள்ளையார் குடும்பம், நாயர் குடும்பம் என்றும், கள்ளர், மறவர், அகமுடையர் வெள்ளாளர் என்றும் பிரித்துக் கொண்டே போகிறோம். மனித இனத்திலே "பாகு பாட்டுக்கு" உள்ள மோகம் வேறு எதற்கும் இல்லை என்று ஆகிவிட்டது நிலைமை. மேற்குறிப்பிட்ட சாதியினரை வரிசையாக நிற்க வைத்து முன்பின் தெரியாத ஒருவரை விட்டு நிற்கின்ற மக்களின் முகத்தைப் பார்த்து சாதியைச் சொல்ல முடியுமா என்று பார்த்தால் முடியாது.

ஆனால் இந்த குரோடாலஸ் குடும்பத்தை சுலபமாகக் கண்டு பிடித்துவிட முடியும். இதற்கு முக்கிய அடையாளம் லோரியல் குழியும், வாலில் உள்ள கிலுகிலுப்பை மணி போன்று சத்தம் கொடுக்கும் "Rattle" என்ற வால் தொகுதியும்தான்.

நாட்டில் பாம்பின் குட்டி பிறக்கும் போது வாலின் முனையில் ஒரே ஒரு மொழுக்கையான மொட்டு போன்ற தோல் இருக்கும். வருடத்திற்கு மூன்று முறை தோலுரிக்கும் (அதாவது சட்டை போடுதல்) இந்த கிலுக்குப் பாம்புகள் ஒவ்வொரு முறையும் வால் தோல் கீழே விழாமலேயே புதிய தோல் வளரும்போது ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு "கிலுக்கு" மணி போன்று அமைந்து விடுகிறது. இந்த கிலுக்குகளை வைத்தே பாம்பின் வயதை பாம்பு நூல் வல்லார் கணக்கிட்டு விடமுடியும். தன் வாலிலிருந்து எழுப்பும் சத்தத்தைத் தான் கேட்க முடியாது. ஏனென்றால் பாம்புகளுக்குத்தான் காது கேளாதே. பின் ஏன் இதற்கு "கிலுகிலுப்பை சத்தம்? தன்னை எதிரியிடமிருந்து காத்துக் கொள்ள இயற்கை அளித்த பரிசு!

கிட்டத்தட்ட இதில் இருபது வகை அமெரிக்காவில் இருக்கிறது. இந்த டயமண்ட் ராட்டில் பாம்பு கிட்டத்தட்ட ஒன்பது அடி வளரும். நியாயமான பருமனும், கூர்மையும் வளைந்த கோடும் நச்சுப் பற்களும் கொண்டது. ஒரு தடவைக்கு பத்து குட்டிவரை போடும்.

"சண்டைக்குப் போகமாட்டேன்
வந்த சண்டையும் விடமாட்டேன்"

என்று சொல்வதைப் போல. தனக்குத் தொல்லை வந்தால் அதே இடத்தில் இருந்து முதலில் சண்டையைப் போட்டுத்தான் பிறகு நகரும் என்று இதைப் பற்றித் திரு ஸ்குட் வொர்த்தி குறிப்பிடுகிறார். இதன் வாயைப் பிளந்து அதன் கோரப்பற்களை பார்க்கும் போது நம் குலை நடுக்க மெடுக்கும்!

இந்த ராட்டில் பாம்புகளுக்குள்ள இன ஒற்றுமையை நாம் கற்றுக் கொள்ள வேண்டும்.

"கல்யாணத்துக்கு போகாட்டியும்
கருமாதிக்குப் போகணும்"

கொஞ்சம் விரித்துச் சொல்லப் போனல்

"வாழ்வுக்குப் போகாட்டியும்
சாவுக்குப் போகணும்" என்ற பழமொழியின் உள் அர்த்தத்தை எண்ணிப் பார்த்தால் எனக்கு வெட்கமாக இருக்கிறது. எல்லோரும் வாழவேண்டும். பிறன் வாழ்வதைக் கண்டு நான் மகிழ வேண்டும், என்ற உயர்ந்த உள்ளம் எங்கே மறைத்தது? என்று தேடுமளவிற்கு நிலமையிருக்கிறது. ராட்டில் பாம்புகள் வருடந்தோறும் குளிர் காலத்தில் மூன்று மாதம் வரை நீண்ட உறக்கம் கொள்ளும். இதற்குப் பெயர் Hibernation. இந்த நீண்ட உறக்கத்தின் சமயம் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரே இடத்தில் சந்திக்கும். மைல் கணக்காக இவை ஊர்ந்து வந்து ஒன்றுகூடி நீண்ட துயிலில் 3 மாதம் ஒரே இடத்தில் தூங்கி கோடையில் வெளியேறும்.

தென் அமெரிக்காவில் ஒரே ஒரு வகை ராட்டில் பாம்புதான் உள்ளது. இதற்குப் பெயர் காஸ்காபெல் Cascabel (Crotalus Durissus). தென் அமெரிக்க இந்தியாவில் இந்தப் பாம்பின் விஷம் கடிபட்டவனின் கழுத்தை முறித்துவிடும் என்று கூறுவதாக கிராம்ப்டன் கூறுகிருர். இது பெருமளவிற்கு உண்மை என்றும் ஏனெனில் இந்தப் பாம்பின் விட சக்தியில் ரத்தக்குழாய்களைத் தாக்கும் சக்தி மட்டுமில்லாது நரம்பினைத் தாக்கும் நிரோடாக்ஸின் சக்தியும் பெருமளவில் இருப்பதால் கடிபட்டவரின் நரம்புகளையும், தசையையும் தாக்கும் போது மூச்சும், பேச்சும் நின்று தலை பலமிழந்து தொங்கிவிடும் என்றும் கூறியுள்ளார்.

வடஅமெரிக்காவில் திருட்டுப் பயத்தைப் போக்க சில வசதி படைத்தவர்கள் "நாய்கள் ஜாக்கிரதை" என்று போர்டு போடுவதைப் போல "ராட்டில் பாம்புகள் ஜாக்கிரதை" என்று போர்டு போடுவதுண்டாம்.

ஆனுல் திருடர்களிலேயே பக்காத் திருடர்களும் இருக்கிருர்களல்லவா? இவர்கள் இந்த ராட்டில் பாம்பையே பாம்புக்கு உரியவர் வீட்டிலிருந்து திருடி பிறகு அவர்களிடமே விற்று பணம் வாங்கி விடுவார்களாம். இதோடு ராட்டில் பாம்புகளை விடுவோம்.

தென் அமெரிக்காவிலுள்ள ஆறு அடி வளரும் மற்றொரு குழி விரியன் பர்டிலான்ஸ் (Fer De Lance) என்ற பாம்பாகும். இதற்கு இலக்கணம், தமிழில் சொல்வதானால்

"முதல்லே அடி அப்புறந்தாண்டா பேச்சு"

என்பதைப் போல யாராவது தொல்லைக்கு வந்தால் முதலில் கடிதான், அப்புறம்தான் கேள்வி!

அமெரிக்க குழிவிரியன்களில் குட்டி போடுவதற்குப் பதிலாக முட்டையிடும் குழிவிரியனின் பெயர் பருத்த புஷ் மாஸ்டர் (Bush Master) என்பதாம். இது 12 அடிவரை வளரும். இதுவும் கொடும் பாம்பாகும்.

அமெரிக்காவில் உள்ள குழி விரியன்களில் குறிப்பிட வேண்டியது செம்புத் தலைப்பாம்பு. மற்றது பஞ்சு வாய்ப்பாம்பு என்று குறிப்பிட்டு இனிக் கீழ்த்திசை குழிவிரியன்களில் முக்கியமான ஒன்றிரண்டைக் கண்டு இப்பகுதியை முடிப்போம்.

மலேய்சியாவில் பினங்கு என்ற நகரில் 'ஆயர் எத்தாம்' (தமிழில் கருப்புத் தண்ணீர்) என்ற இடத்தில் ஒரு சீனக் கோவில் இருக்கிறது. இதற்குப் பெயரே பாம்புக் கோயில். கோயில் சிறிய கோயில்தான். கோயில் உள்ளே நுழைந்ததும் ஒருவித ஊதுவத்தியின் புகை!

நிறைய பூந் தொட்டிகளில் செடிகள் வளர்க்கிறார்கள். சிலவற்றில் இலைகளுண்டு சிலவற்றில் இலைகளற்ற கொடிக்கன்னி போன்ற செடிகள் உண்டு,

இலைகளுள்ள செடியோடும், இலைகளற்ற செடியோடும் பின்னிக் கொண்டிருப்பவை நூற்றுக்கணக்கான குழிவிரியன்கள்.

பச்சை உடலும் முதுகில் கரும் வளையங்களும் பக்க வாட்டில் மஞ்சள் நிறமும் வாலில் சிவப்பு நிறமும் உடைய அழகிய விரியன்கள் இவைகள். இவைகள் கடிப்பதில்லை. ஆயிரக்கணக்காண சுற்றுப் பயணிகள் இக் கோயிலுக்கு இப் பாம்புகளை காணவே வருகின்றனர். இந்த விரியன்களுக்குப் பெயர் வேக்ளர் குழி விரியன்(Waglers Pit Viper) இவைகள் ஏன் இக்கோவிலில் யாரையும் கடிப்பதில்லை என்பதற்குப் பல கதைகளுண்டு. ஒன்று சாமியின் சக்தி! இரண்டாவது புகையின் மயக்கம்! மூன்றாவது பல் எடுக்கப்பட்டவை! இப்படிப் பல கதைகள்.

நான் இப் பாம்புகளை வளர்த்தது மாத்திரமல்ல. என்னோடு சிங்கப்பூரில் கல்வி ஒலிபரப்பு (Educational T. V. Service) க்காக

நான் எடுத்த செய்திப் படத்தில் நடிக்கவும் வைத்தேன். மிக அமைதியான பாம்பு. இதன் விஷம் ரத்தக் குழாயைத் தாக்கும்.

கீழை நாடுகளில் உள்ள குறிப்பாக மலேயா சிங்கப்பூரில் உள்ள குழிவிரியன்களில், மலைக்குழிவிரியன், சுமத்ரா குழி விரியன், போப் குழிவிரியன் (Pope's Pit Viper), கடற்கரைக் குழிவிரியன், பட்டை மூக்குக் குழி விரியன் ஆகியவைகள் நிறத்திலும், நீளத்திலும், வேறுபட்டுள்ளன.

கீழை நாடுகளில் மிகவும் குறிப்பிடத் தக்க குழிவிரியன் குடும்பம் மலாயாக் குழிவிரியன் (Malayan Pit Viper) என்ற விரியன்தான். இது விஷ சக்தியிலும் தாக்குதலிலும் பெயர் பெற்றது. இன்னும் இருவகைகளில் இது சிறப்புப் பெற்றுள்ளது. இதன் இரு கண்களுக்கு இடையேயுள்ள தலைச் செதில்களில் 3 பெரியதாக இருக்கும். குட்டி போடுவதற்குப் பதில் இது முட்டையிடும். மற்றது இதன் விஷத்திற்கு உலகில் நிறைய கிராக்கியுண்டு. காரணம் இதன் விஷத்திலிருந்துதான் உலகில் 'விரியன் வகைகள் கடித்தால் காப்பாற்ற உதவும் மாற்று மருந்து தயாரிக்கிறார்கள்.

தமிழ்நாட்டில் மலைப்பகுதிகளிலும் வரண்ட இடங்களிலும், இருவகைக் குழிவிரியன்களுள்ளன. ஒன்று குள்ளக் குழி விரியன், மற்றது புல்விரியன். இவைகள் உருவில் மிகச் சிறியவை. இவைகளின் விஷம் அவ்வளவு கொடுமை வாய்ந்ததில்லை.

ஆசியாவில் பர்மா, சீனா, தாய்லாந்து, இந்தோனேஷியா, சிலோன் ஆகிய இடங்களிலும் இக் குழிவிரியன்கள் வாழ்கின்றன.

# 14

## மலைப் பாம்புகள்

**Pythons**

விடமற்ற பாம்புத் தொகுதிகளில் அதிக நீளமுள்ள அன கோண்டா பாம்பினை முதல் பகுதியில் கண்டோம். மலைப்பாம்பு வகைகளிலே அதிக நீளமும்—கிட்டத்தட்ட முப்பது அடி நீளமும் கிட்டத்தட்ட 250 பவுண்டு கனமுமுள்ளவை ரெடிகுலேடட் மலைப் பாம்புகளாகும் (Python Reticulated). மலேய்சியா, சிங்கப்பூர், இந்தோனேஷியா, இந்தியா, பர்மா, சைனு ஆகிய இடங்களில் இம் மலைப்பாம்பு சிறப்புப் பெற்றவை. இந்தியாவிலுள்ள மற் ெருரு மலைப்பாம்பிற்குப் பெயர் மொலுரஸ் மலைப்பாம்பாகும் (Python Molurus). மலேய்சியாவிலேயுள்ள மற்ெருரு வகை மலைப்பாம்பிற்குப் பெயர் கர்டிஸ் மலைப்பாம்பாகும். இது நன்ருக பருத்து ஒன்பதடி வரை வளரும்.

அழகிய வலை போன்று பின்னப்பட்ட செதில்கள் இதன் உடலில் அமைந்திருப்பதால் இதற்கு ரெடிகுலேடட் மலைப்பாம்பு எனப் பெயர் கொடுத்தனர். நாக வகையிலே ராஜநாகமும் விரியன் வகையிலே கண்ணுடி விரியனும் முக்கியத்துவம் பெற்ற தைப் போல மலைப்பாம்புகளிலே சிறப்புப் பெற்றது ரெடிகு லேடட் மலைப்பாம்பாகும்.

இந்தப் பாம்பின் இறைச்சி சீனர்களால் விரும்பி உண்ணப் படுகிறது. சிங்கப்பூரின் சைனு நகரம் (China Town) என்று அழைக்கப்படும் இடத்தில் மலைப்பாம்பு சூப், கறி ஆகியவற்றை உணவோடு பரிமாறுகிருர்கள். சீனுவில் கேட்கவே வேண்டாம்!

எனக்குச் சிங்கப்பூரிலே ஆல்ரவுண்டர் (All rounder) என்று பெயர். கொஞ்சம் விளக்கினுல் Jack of All Trades. எல்லாத்

தொழிலும் தெரிந்தவன் என்று பொருள். இதில் முழுதும் உண்மையில்லை என்றாலும் ஓரளவு உண்மை இருந்தது.

நான் விமானப் படை சுகாதாரப்பிரிவில் ஒரு ஸ்டோர் கீப் பராகத் தொழில் ஆரம்பித்தவன். அங்கு இருந்தபோது கொசு ஒழிப்பு இயக்கத்தினரோடு கொசுக்களை ஆராய்வேன். பாம்பு களையும் ஆராய்ந்தேன். மிருகங்களைப் பாடம் செய்யும் கலையான டாக்ஸி டர்மியையும் (Taxi dermy) கற்றேன். மாலையில் இரண்டு மணி நேரம் மக்கள் பாதுகாப்புப் படையில் மருத்துவத் துணை வனாக (Medical Orderly) யாகப் பணிபுரிந்தேன். அதன்பிறகு இளங் குற்றவாளிகளின் கைதி முகாமில் பாடம் போதித்தேன். இடையே வாரம் ஒருமுறை ரேடியோ, டெலிவிஷனிலும் நடித் தேன். நாடகமும் எழுதினேன். சுகாதாரத்தைப் பற்றி விரி வுரையாற்றினேன். சனி, ஞாயிறு நாட்களில் ராம கிருஷ்ண மடாலய அனாதை இல்லத்தில் தோட்டத்தை வெட்டி செப்பனிட் டேன். தொண்டர்படை ஒன்றை நிறுவி மக்கள் கேட்கும் உதவி களையும் செய்தேன். இப்படி பலப்பல! சில பேர் கேட்பார்கள் "உனக்கு தூங்க நேரம் இருக்காதே!" என்று.

இப்படியிருந்த எனக்கு ஒரு சோதனை வந்தது. மலைப் பாம்பைப் பற்றியது அது. எனது நண்பர் ஒருவர் போர்த்து கீஸிய தமிழர். எனக்கு மிருகங்களைப் பாடம் செய்யும் கலையைக் கற்பித்தவர்.

ஒரு நாள் அவரோடு மற்றொரு தமிழ் நண்பரும் இருந்தார். போர்த்துகீஸிய நண்பர் மலைப்பாம்பு கறியைச் சுவைத்து உண்ணு பவர். எனது மற்றைய தமிழ் நண்பர் வாய் சும்மாயில்லாமல், "ஏய்யா! பாம்பு புடிக்கிறீயே; பாம்புக்கறி சாப்பிட்டிருக்கியா?" என்றார். "சந்தர்ப்பம் வந்தால் அதையும் சாப்பிடவேண்டியது தான். பாம்பு திங்கிற ஊருக்குப் போனால் நடுக்கண்டம் நமக் கில்லையா?" என்றேன்.

"ஏய்யா பட்டாவுடறே! நீ பாம்புக்கறியைச் சாப்பிடு, 10 வெள்ளி பந்தயம்" என்றார். ஒரு பக்கம் பத்து வெள்ளி, மறு பக்கம் சவால்!

"முதல்லே பத்து வெள்ளியை காட்டு" என்றேன். உடனே பத்து வெள்ளியை எடுத்து மேசைமீது போட்டார், அதை எடுத்து போர்த்துகீஸிய நண்பரிடம் கொடுத்து, "புறப்படுங்கள் சைனா டவுனுக்கு" என்றேன்.

உடும்பு, வாத்து, ஆமை, மீன், கோழி ஆகியவைகளை உரித்து தொங்க விட்டிருந்தனர். பாம்புத் தசையும் தொங்கியது.

உடனே மலாய் மொழியில் எனது போர்த்துகீஸிய நண்பர் கடைகாரரிடம் ''தவுக்கே டூவா உலார்பியா சூப்'' அதாவது ''ஐயா இரண்டு பாம்புக்கறி சூப் கொண்டுவா!'' என்றார். அவன் இரண்டு பெரிய துண்டை வெட்டி ஒரு கட்டையில் வைத்து நைஸாக கொத்த ஆரம்பித்தான். நான் எனது முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டேன்.

ஐந்து நிமிடத்தில் இரண்டு குழிந்த பீங்கானில் சூப் வந்தது.

''என்னையா உட்கார்ந்திருக்கே'' என்றான் எனது நண்பன். ''இருப்பா கொஞ்சம் ஆறட்டும்'' என்றேன்.

அடுத்த நிமிடம் கண்ணை மூடிக்கொண்டு ஒரே உறிஞ்சில் சூப்பைக் குடித்துவிட்டு பிளேட்டை வைத்து, ''எடுங்க பத்து வெள்ளியை'' என்றேன். எனது போர்த்துகீஸிய நண்பர் பணத்தைக் கொடுத்தார்.

நேரே காரில் ஏறி வீடு வந்தேன்.வாயில் ஏலக்காயைப் போட்டுக்கொண்டு நன்றாகத் தூங்கிவிட்டேன். விரும்பி சாப்பிடுவது வேறு, வீம்புக்காக சாப்பிடுவது வேறு!

1976இல் பிப்ரவரி மாதம் பிரிட்டிஷ் அரசு சார்பில் சிங்கப்பூர் கலாச்சார அமைச்சு அதிகாரிகளோடும், பிரிட்டிஷ் தூதுவரோடும் பேச்சுவார்த்தை நடத்த சிங்கப்பூர் சென்றிருந்தேன். எனது வர்த்தக நண்பர் திரு பக்கிரி முகமது அவர்களின் சீன நண்பர்கள் எனக்கு ஒரு விருந்தளித்தனர். கிட்டத்தட்ட 12 வகை உணவு. குறிப்பாக புலால் உணவும் பரிமாறப்பட்டது. ஹார்க் மீனின் சூப் சீனர்களின் விருந்தில் பிரசித்திப் பெற்றது. பத்தாவது வகையில் இந்த சூப் பரிமாறினார்கள். விஸ்கி என்ற மதுவும் பரிமாறினார்கள். விருந்து முடிந்ததும் என்னை ஹோட்டலுக்கு அழைத்து வந்த நண்பர் ''விருந்தினைச் சுவைத்தீர்களா'' என்றார். ''மிக அருமை'' என்றேன். ''உங்களுக்குப் பிடித்த உணவு எது?'' என்றார். ''ஹார்க் மீன் சூப்'' என்றேன். ''வெரிகுட்'' என்று சிரித்தார். ''என்ன சிரிக்கிறீர்கள்?'' என்றேன்.

''நீங்கள் பாம்பு நிபுணர் என்பதால் உங்களைக் கவுரவிக்க சீனாவிலிருந்து தனியாகத் தருவிக்கப்பட்டுத் தயாரிக்கப்பட்ட பாம்பின் சூப்தான் நீங்கள் கூறிய ''ஹார்க் மீனின் சூப்'' என்றார்.

நானும் ஒரு 'வெரிகுட்டை'' போட்டு ஹோட்டலுக்குள் சென்றேன்.

எதற்கும் மனம்தான் காரணம். உலகில் விருப்பு, வெறுப்பு எல்லாவற்றிற்கும் காரணம் மனந்தானே? வெறும் மலைப் பாம்பின் தலையையும் வாலையும் செதிலையும் பற்றி எழுதிக் கொண்டே போனால் வாசகர்களுக்குச் சலிப்பு தட்டும் என்பதாலேயே மேற்கண்ட நிகழ்ச்சிகளை எழுதினேன்.

1970 வரை கிட்டத்தட்ட 4 ரெடிகுலேடட் மலைப்பாம்புகளை நான் வளர்த்தேன். இரண்டை எனது வீட்டிலும் மற்ற இரண்டை அலுவலகத்திலுள்ள மிருகக்காட்சி சாலையிலும் வளர்த்தேன்.

1964இல் என் இளைய மகளுக்கு வயது ஒன்றரை. பெயர் அருண்மொழி. அவள் இம் மலைப்பாம்புக் குட்டிகளோடு விளையாடுவதைப் படத்தில் காணலாம். பாம்போடுதான் என் மகள் சில சமயம் தூங்குவாள். மற்றொரு பாம்பு 12 அடி. அதன் படமும் இந்நூலில் வெளியிடப்பட்டுள்ளது. மிக அருமையாகப் பழகும் பெண் பாம்பு அது. எனது மகள் அதன் தலையில் கையால் அடித்தாலும் தலையை மடக்கிக்கொள்ளுமே தவிர கடிக்க முற்பட்டதில்லை. இதன் பற்கள் கூர்மையானவை. வலுவானவை. கடித்தால் விடுவது கஷ்டம். கடிக்கும்போது மேல் பல்லும் கீழ்ப் பல்லும் தசையோடு பூட்டுப்போட்டது போல் இறுகும் சில சமயம் சதையைக் கீழித்துத்தான் எடுக்க நேரும்.

இதன் இறுக்கும் சக்தியும், இதன் சீரணிப்பு சக்தியும் வியக்கத் தக்கது. மிகப் பெரிய பாம்புகள் கடும் புலியிலிருந்து, அமைதியான மான்கள் வரை விழுங்கியதற்கு ஆதாரபூர்வமான வரலாறு உண்டு. பல பத்திரிகைகளில் இளஞ்சிறுர்களையும் விழுங்கியதாகப் படித்தேன். இது வலிய யாரையும் விழுங்குவதில்லை. இதன் அருகில் யாராவது வேகமாக ஓடினாலோ, தொல்லைப்படுத்தினாலோ இது தன் வேலையைச் செய்துவிடுகிறது!

கிட்டத்தட்ட இரண்டரை ஆண்டுவரை கூட உண்ணாது இருந்த மலைப்பாம்புகள் உண்டு என்று படித்திருக்கின்றேன்.

இவைகளுக்கு ஆகாரம் கோழிக்குஞ்சுகள், எலிகள், பறவைகள் முதலியவையாகும்.

சிங்கப்பூரில் என் வீட்டிலிருந்து தொலைக்காட்சி ஸ்டூடியோ 5 மைல் தொலைவிலிருக்கிறது. சில சமயம் படப்பிடிப்பில் நடித்துவிட்டுத் திரும்பிவரக் கிட்டத்தட்ட நள்ளிரவாகிவிடும்.

இப்படி நடிக்கப் போகும்போதெல்லாம் என்னுடைய உள் பனியனுக்குள் ஐந்தடி நீளமுள்ள மலைப்பாம்புக் குட்டி தூங்கும். சில சமயம் பனியன் வழியாக என் தோள்மேல் படுத்து காற்று வாங்கும்.

இதன் கழுத்தைவிட தலை சிறிது பருத்திருக்கும. 120 வரை முட்டைகள் இடும். மூன்று மாதம் கழித்து முட்டையிலிருந்து குட்டி வெளிவரும். தாய்ப்பாம்பு தரையிலுள்ள பொந்துகளில் முட்டையிட்டு முட்டையைக் காத்துவரும். முட்டையிலிருந்து குட்டி வெளிவர பாம்பின் வெப்பம் தேவையில்லை. முட்டை ஈரப்பசையோடு இருக்கவே தாய் பாதுகாக்கும்.

சில சமயத்தில் பசி வந்தால் மற்ற பாம்புகளையும் விடாது.

பைத்தன் பாம்புகளில் ஆப்ரிக்காவில் வாழும் ராயல் மலைப் பாம்பு கிட்டத்தட்ட ஐந்தடி வரை வளரும். இது குட்டி போடும்.

மலாய்சியாவிலுள்ள மூன்ருவது வகை மலைப்பாம்பிற்கு ரத்த மலைப்பாம்பு என்று பெயர் (Blood Python). இது சிவப்பு வண்ணமுடையது. பச்சை வண்ணமுடைய பாப்புவான் மலைப் பாம்பு நியூகினியில் காணப்படுகிறது. ஆஸ்த்திரேலியா பைத்தனை டயமண்ட் பைத்தன் என்று அழைக்கிருர்கள்.

உயிரோடு இருக்கின்றபோது இது வீட்டிலும், வயல் வெளிகளிலும் உள்ள எலிகளை ஒழித்து நாட்டுக்குப் பெரும் நன்மை செய்கிறது. சிங்கப்பூரிலுள்ள சில பெரிய மர ஆலைகளில் சீனர்கள் இவைகளை அதிர்ஷ்டத்திற்காக வளர்க்கின்றனர். இந்த மர ஆலைகளிலிருந்து இவை வெளியே ஓடிவிட்டால் தங்களுக்குத் துரதிர்ஷ்டம் என்று ஒரு சில சீனர்கள் கருதுகிருர்கள்.

இதன் மலத்தை மருந்திற்காக உபயோகிக்கிருர்கள். பார்க்கவும், ரசிக்கவும், வளர்க்கவும் ஏற்றது இம் மலைப்பாம்பு இனம்.

# 15

## போவாப் பாம்புகள்

**The Boidae**

போவாப் பாம்புகளும், பைத்தன் (Python) பாம்புக் குடும்பமும் விஷமற்றவை. பல்லி இனத்திலிருந்து இவைகள் உருமாற்றம் அடைந்தவை என்பதற்கு, இவைகளின் மலத்துவாரத்திற்கு மேல் இரண்டு மிக நுண்ணிய கால்கள் எலும்புபோல் நீட்டிக்கொண்டிருப்பது சான்ருகும். பெரும் பகுதி போவாப் பாம்புகள் அதிக நீளமும் கனமும் கொண்டவை.

போவாக்களும், மலைப்பாம்புகளும் இரு சுவாசப் பைகள் அமைந்தவை. பற்கள் ரம்பம் போன்று சிறிது உள் வளைந்து இருக்கும். இவைகள் பெரும்பாலும் தங்களுடைய உணவாக உட்கொள்ளும் மிருகங்களை நெருக்கிக் கொன்று உண்ணும். ஆகவே இவைகளை நெருக்கிகள் (Constrictor) என்று அழைக்கலாம்.

உண்மையான போவா இனத்துப் பாம்புகள் பெரும்பகுதி அமெரிக்காவில் வாழ்கின்றன. பூமியைக் குடைந்து வாழும் மண் போவாப் பாம்புகள் வட ஆப்ரிக்காவிலும் மேற்கு ஆசியாவிலும் பசிபிக் தீவுகளிலும் வாழ்கின்றன. தமிழ்நாட்டிலுள்ள போவாப் பாம்பு (Russell's Sand-Boa, Eryx Conicus) மூன்றடி வரை வளர்வன. பார்ப்பதற்கு மலைப்பாம்புக் குட்டி போலிருக்கும். இதை உழவன் பாம்பு என்று பேராசிரியர் ராஜேந்திரன் பெயர் கொடுத்துள்ளதாக அறிந்தேன். இவைகளும் குட்டிபோடுபவை.

அமெரிக்காவில் வாழும் போவாப் பாம்புகளில் நெருக்கும் போவாப் பாம்பு (The Boa Constrictor) கிட்டத்தட்ட 18 அடி

வரை வளரும். மலைப்பாம்பினைப் போல உடலின் நடுவில் வெள்ளையும் சுற்றிலும் கருமையுமுள்ள செதில்களிருக்கும்.

வானவில் போவா என்பவை நான்கடி வரை வளரும். அதன் உடல் பல வண்ணமுடையது. மற்றொன்று 18 அங்குலமே வளரும் ரப்பர் போவாவென்பது, மற்றது அமெஸான் மர போவா. அது ஆறு அடி வளரக்கூடியது.

கியூபா நாட்டில் 12 அடி வரை வளரும் கியூபா போவா என்பவை கரும்புத் தோட்டங்களிலும் காடுகளிலும் வாழ்கின்றன.

போவாப் பாம்புகளிலேயே நட்சத்திர போவாவான அனகோண்டா (The Anaconda, Eunectes Murinus) என்பது தான் அதிக நீளமானதாகும். இவை அமெரிக்கா மற்றும் டிரினிடாட் தீவுகள் வரை பரவியுள்ளன. கிட்டத்தட்ட 40 அடி நீளமும் 250 பவுண்டு எடையும் உள்ளதான அனகோண்டா இருந்தது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். சாதாரணமாக ஆறு மனிதர்களின் உயரம் உள்ளவை. இந்த அனகோண்டா பாம்புகள் 70 குட்டி வரை போடும். இப் பாம்புகள் சதுப்பு நிலங்களிலும் ஆற்றோரங்களிலும் வாழ்பவை. இவைகள் பறவைகள் மற்ற சிறு மிருகங்களைச் சாப்பிட்டு வாழ்கின்றன.

16

# நஞ்சே வாழ்க!

"அடிக்கின்ற கைதான் அணைக்கும்', என்பதைப்போல, கடிக்கின்ற பாம்பிலிருந்து கிடைக்கும் நஞ்சுதான் உயிர் காக்கும் என்று நான் எழுதியதைப் படிக்கின்றபோது என்னைப் பற்றி என்ன நினைப்பீர்கள் என்பதனை நான் அறிவேன்.

ஏன் பாம்புகள் மட்டும் நஞ்சினை உற்பத்தி செய்கின்றன என்பது இன்று வரை விலங்கு நூல் வல்லாருக்குப் புரியாத புதிர்!

சாதாரண மனிதனுக்கு விலை மதிக்க முடியாத கார் கிடைத்தால் அது அவனுக்குச் செல்வத்தின் பெருமையைக் காட்டுவதாக எப்படி அமைகிறதோ, அதேபோல பாம்புகளுக்கு நஞ்சு ஒரு வரப்பிரசாதம்!

நஞ்சு என்பது சுத்தமான வெளிர் மஞ்சளான, ருசியற்ற ஒரு திரவமாகும். நஞ்சினை உலரவைத்து முப்பது ஆண்டுகள் வைத்திருந்த பிறகு, அதைத் தண்ணீரில் கலந்து சோதனை செய்யும்போதும் அதன் சக்தி மாறுபடாதிருந்தது என்பதை திரு கிராம்டன் அவர்கள் கூறியுள்ளார்,

பாம்பின் நஞ்சு ருசியற்றது என்பதை எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? விஷம் தாக்காது உடம்பினை விஷமுறிவு செய்து கொண்டவர்களை இரண்டு பாம்பிலிருந்து இறக்கப்பட்ட நஞ்சினை அருந்தச் செய்து இதைக் கண்டுபிடித்ததாகப் படித்திருக்கிறேன். ஆனால் இவர்களுக்கு வயிற்றுப் புண்ணோ, வாய்ப்புண்ணோ இல்லாது இருக்கவேண்டும்.

தமிழ் நாட்டில் எட்டிக்ககாய் என்ற கொட்டையை ஊசி முனை அளவு முதலில் சாப்பிடத் துவங்கிப் படிப்படியாக இந்த

அளவைக் கூட்டி ஒரு எட்டிக்காய்க் கொட்டையை முழுதும் ஒருவன் தின்று முடித்தால் எந்த நஞ்சும் தாக்குவதில்லை என்று சொல்லக் கேள்விபட்டிருக்கிறேன். இது எந்த அளவிற்கு உண்மை என எனக்குத் தெரியாது.

1968இல் நான் சிங்கப்பூரிலிருந்தபோது 'ஸ்டெயிட் டைம்ஸ்' என்ற ஆங்கில இதழ் ஒரு செய்தியைப் பிரிட்டிஷ் மருத்துவக் கழக ஏடொன்றினை ஆதாரமாகக் காட்டி வெளியிட்டது.

பினங்கு "மருத்துவ நிலையத்தில்" பணிபுரிந்த ஒரு சீன டாக்டர் லண்டன் சென்று மலாயாக் குழிவிரியனின் நஞ்சு (Thrombosis) இரத்தம் உறைவதைத் தடுத்து உயிர்காக்க உபயோகப்படுவதை ஆராய்ச்சி மூலம் நிரூபித்துள்ளார். அவர் தயாரித்த மருந்தின் பெயர் அவ்ரின் (Avrin) என்பதாகும்.

உலகின் பல இடங்களில் குறிப்பாக பம்பாய் ஹாப்கின்ஸ் நிலையம், தாய்லாந்து செஞ்சிலுவைச் சங்கம், மலேசியா ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா ஆகிய இடங்களில் நஞ்சு இறக்கும் நிலையங்கள் பெரும் வருவாயை ஈட்டுகின்றன. இவைகள் பாம்பின் கடிக்கு விஷமுறிவு நஞ்சினைத் தயாரிக்கின்றன.

அமெரிக்க நாட்டில்தான் பாம்பின் நஞ்சினால் விளையும் நற்பயன் பற்றிச் சிறப்பான ஆராய்ச்சியில் ஈடுபட்டுக் கோடிக்கணக்கான ரூபாயைச் செலவிடுகின்றனர்.

அமெரிகாவின் பில்ஹேஸ்ட் நிறுவனத்தில் தயாரிக்கப்படும் கோப்ராஸின் (Cobroxin) என்ற நஞ்சின் மருந்து தாளமுடியாத வலிகளை குணப்படுத்தும் என்றும், நைலாக்ஸின் (Nyloxin) என்ற நஞ்சு முடக்குவாத்தை குணப் படுத்தும் என்றும் நிருபித்துள்ளனர்,

1952இல் அமெரிக்க அறுவை நிபுணன் என்ற சஞ்சிகையில் டாக்டர்கள் ரால்ட், ஹில்ஸ், பைரர் ஆகியோர் நாகத்தின் நஞ்சினை 30 பேருக்கு மேல் உபயோகித்துக் கடுந் தலைவலி (ஒற்றைத் தலை வலி) யைப் போக்கியதையும் சில சமயம் காலையோ, கையையோ மற்ற உறுப்புக்களையோ வெட்டி எடுக்கும் நிலையில் நோயாளிகளுக்கு டார்பினும், டிமிரோஸ் என்ற மயக்க மருந்துகளும் (வலி தெரியாதவாறு) செய்ய முடியாத வேலையை நாக நஞ்சு வலி தெரியாதவாறு செய்து அறுவைச் சிகிச்சை வெற்றி பெற உதவியதையும் குறிப்பிட்டுள்ளனர்.

1968ஆம் ஆண்டு சூலை மாதம் 8ஆம் நாள் மலேய்சிய இந்திய ஹைகமிஷன் அலுலவகச் செய்தி அறிக்கையில், பம்பாய் புற்று நோய் ஆராய்ச்சிக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர். குமாரி பெட்ரிஸ் பிரகன்ஸா என்பவர் நாகப் பாம்பின் நஞ்சு புற்று நோயைக் (Cancer) குணப்படுத்தும் முறையில் வெற்றி பெற்று வருவதை ஆல் இந்தியா ரேடியோ செய்தி மூலம் வெளியிட்டுள்ளனர். அதன் ஆங்கில அறிக்கையை அப்படியே இங்கு வெளியிட்டுள்ளேன்.

CANCER BREAK THROUGH?

An Indian Scientist, Dr Miss Beatrice Braganza, Dean of the Cancer Research Institute in Bombay has succeeded in separating pure protein from cobra venom according to All India Radio. The tests have shown that the protein prevents the growth of cancer of a particular type in mice. Dr Braganza visited Brussels recently to advice a laboratory on the technique she has devoloped for isolating the protein. She told the All India correspondent in Bombay that research was now going on at the institute to find out the effects of cobra venoms on various kinds of malignant tumors.

இறுதியாக லுகோமியா என்ற கொடும் நோயைக் குணப்படுத்தவும், புற்று நோயைக் குணப்படுத்தவும் இந்தியக் கட்டு விரியனின் விஷம் உதவுவதாகவும் அறிகிறோம்.

மேற் கண்ட விஞ்ஞான ஆய்வின் வெற்றி மூலம் பாம்பின் நஞ்சு நம் உயிர் காக்க உதவுவதை அறிந்து நஞ்சினை நாம் வாழ்த்தாமலிருக்க முடியுமா?

17

# பாம்பு கடித்தால்?

விஷம் தீண்டப்பட்டவர்களுக்கு முறைப்படி சிகிச்சையளித்தால், சில முன் உதவிகளை முறைப்படி செய்தால் நிச்சயம் குணப்படுத்த முடியும், முறை தவறினால் கோட்டை விட்டு விடுவதுண்டு.

தற்போது 59 வயதையடைந்துள்ள வில்லியம் இ. ஹேஸ்ட் (William E. Haast) என்பவர் அமெரிக்க நாட்டு "மியாமி" நகரிலுள்ள பாம்பு நிலையத்தின் இயக்குநர். இவர் 1967 வரை கிட்டத்தட்ட ஆறு லட்சம் பாம்புகளிலிருந்து நஞ்சினை ஆராய்ச்சிக்காக எடுத்தவர், அவருடைய மனைவி கிளாரிடா என்பவர்தான் அவருடைய முக்கிய உதவியாளர்.

இவர் உலகத்தில் வேறு எந்த மனிதருமே அறிந்திராத அளவு பாம்புக்கடியைப்பற்றி அறிந்த பேரறிஞர். அவர் ஒரு நடமாடும். ஆய்வுக்கூடம். அவர் இரத்தமே சில சமயம் பாம்பு கடித்தவர்களுக்கு விஷமுறிவு மருந்தாக உபயோகப் படுத்தப்படுகிறது.

உலகதித்லேயே அதிகப்படியான பாம்புக் கடிக்கு இலக்கானவர் பில் ஹேஸ்ட். 1967 வரை கிட்டத்தட்ட 101 முறை அவர் கொடும் பாம்புகளான இந்திய நீலக்கட்டுவிரியன், ராஜநாகம், பவழப் பாம்புகள், பச்சைமம்பா பாம்பு ஆகியவைகளால் கடிக்கப்பட்டும் இன்று உயிரோடு ஒரு பெரிய ஆய்வுச் சாலையையே நிருவகித்து வருகிறார். இந்த அதிசய வீரரின் படத்தைப் பெருமையோடு வெளியிட்டுள்ளேன்.

சிலருக்குப் பாம்பைக் கண்டாலே குலை நடுக்கம். 1967 இல் என் அலுவலகத்தில் டெலிபோன் மணியடித்தது. தொலைபேசியில் என்னை அழைத்தவர் என்னுடைய பிரதம மருத்துவ அதிகாரி

திரு F.C. ஹர்ரல் அவர்கள். "உடனே வா; பாம்புக்கடி கேஸ் நோயாளி ஒருவர் அனுமதிக்கப்பட்டுள்ளார்" என்ருர்.

என்னுடைய அலுவலகத்திற்கும் மருத்துவமனைக்கும் 100 கெஜ தூரந்தான். வேகமாக விரைந்தேன். நோயாளி மயக்க நிலையில் அதிர்ச்சி யுற்றிருந்தார். அழைத்து வந்திருந்தவர் விமானப் படையில் பணி புரியும் சிப்பந்தி வெள்ளையர். கடிபட்டவரும் வெள்ளையர்.

என்ன நடந்தது என்று நோயாளியைக் கொண்டு வந்தவரைக் கேட்டேன். வேலைக்குப் புறப்படக் காரை (கடிப்பட்டவர்) திறந்ததாயும், திடீரெனப் பாம்பு கடித்து விட்டது என்று காலைப் பிடித்துக் கொண்டு கீழே வீழ்ந்ததாகவும் கூறினர். கொண்டு வந்தவர் பாம்பையும் அடித்து இவரையும் ஆம்புலன்ஸில் கொண்டு வந்திருந்தார்.

பாம்பு எங்கே என்றேன். ஒரு அடி நீளமுள்ள ஒரு "வீட்டுப் பாம்பு" அது. அதை Common House Snakeஎன்று அழைப்பார்கள். அது ஒரு குட்டி. பல்கூட முழுதும் வளர்ச்சியடையாத குட்டி. இந்தப் பாம்புகளை எத்தனையோ முறை நான் என்னைக் கடிக்கவிட்டிருக்கிறேன். எந்த வலியுமே இருக்காது. நஞ்சற்ற பாம்பு.

தலைமை மருத்துவரிடம் விஷயத்தை விளக்கி அவருடைய காலைச் சோதனை செய்தேன். விமானப் படையிலுள்ளவராதலால் காலில் பூட்ஸும் சாக்ஸும் அணிந்திருந்தார்.

முகத்திலே தண்ணீர் தெளித்து ஆளை மயக்கம் தெளிய வைத்து விஷயத்தைக் கேட்டபோது பாம்பைக் கண்ட மாத்திரத்தில் மயங்கி விழுந்ததாக அறிவித்தார்.

அமெரிக்காவிலே "பர்டிலான்ஸ்" என்பது ஒரு குழி விரியன் பாம்பு. இது ஒரு கேக் செய்யும் தொழிலாளியைக் கடித்தது. அவரை வீட்டிற்குத் தூக்கி வந்தனர். அவருடைய மனைவி தேங்கா யொன்றைத் துருவிக் கொண்டிருந்தார். கடிபட்டவருக்கு ரத்தம் கடிவாயிலிருந்து கசிந்தது. அவரை ஒரு நாட்டு வைத்தியரிடம் தூக்கிச் சென்றனர். வைத்தியர் புண்ணைக் கழுவுமாறு கடிபட்டவரின் மனைவியைப் பணித்தார். பாம்பு கடித்தவர் கடிபட்டதும் பயத்தால் அரை மைல் ஓடி வந்திருக்கிருர்.

வைத்தியம் ஆரம்பிக்கும் முன் கடிபட்டவர் இறந்து போனர். அவருடைர மனைவியும் அவர் இறந்து போன இரண்டு மணிக்குள் இறந்து விட்டார்.



பாம்பு நிபுணர் திரு வில்லியம் இ. ஹேஸ்ட்

''ஓரே கல்லில் இரண்டு மாங்காயை'' பர்டிலான்ஸ் பாம்பு வீழ்த்தி விட்டது.

பர்டிலான்ஸ் பாம்பு கணவனைத்தானே கடித்தது. மனைவி பிரிவாற்றல் தாங்காமல் இறந்தாளா? என்ற கேள்வியை எழுப்பினல், அதற்குப் பதில் ''இல்லை'' என்பதுதான்.

கணவனைப் பாம்பு கடித்துத் தூக்கி வந்தபோது மனைவி தேங்காயைத் திருகியில் திருகினாள். அப்போது அவள் கை திருகியில் பட்டு சிராய்ப்பு இருந்தது. தன்னுடைய கணவனின் பாம்பு கடித்த இடத்திலிருந்து வந்த இரத்தத்தை அவள் கையால் கழுவும் போது பாம்பின் விஷம் கடிபட்டவரின் புண்ணிலிருந்து உராய்ந்து போன இவள் கையிலும் பட்டு இரத்தத்திலும் கலந்தது. விஷம் வேறு. கணவன் இறந்த பயம், அச்சம் ஆகிய இரண்டும் சேர மனைவியின் உயிரும் பிரிந்தது.

இந்த அத்தியாயத்தில் பாம்பு கடித்தால் குணப்படுத்த முடியும் என்பதை பில்ஹேஸ்ட் மூலம் நிரூபிக்கலாம். பாம்புக் கடி விஷத்தைவிட விஷத்தின் அதிர்ச்சி, கடி படாமலேயே உள்ள பயம் மக்களின் உயிரைக் குடிக்கத் துணையாக இருக்கின்றன என்பதை நாம் உணரமுடியும்.

எனக்குத் தலைமை மருத்துவராகவும், வழிகாட்டியாகவும் இருந்த விமானப் படை டைரக்டர் குரூப் கேப்டன் எப். சி. ஹர்ரல் (Aero Aviation Director Group Captain F. C. Hurrell) என்பவரும் அவருடைய நண்பர் டாக்டர் லேன் (Dr W. C. Lane) என்பவரும் அடியிற் கண்ட சில முதலுதவி வழிகளை எனக்குச் சொன்னார்கள்.

**பாம்புக் கடிக்கு முதல் உதவிகள் :**

1. ஒருவரை நஞ்சுள்ள பாம்பே கடித்திருந்தாலும் அவரிடம் சுற்றிலுமுள்ளோர் பரபரப்பு அடையாமல் கடித்தது விஷப் பாம்பல்ல சாதாரண விஷமற்ற பாம்புதான் என்று அவருக்கு நம்பிக்கையூட்டுவது முதல் வேலை. இதைத்தான் ஆங்கிலத்தில் 'Reassurance' என்று கூறுவார்கள். இது பாம்பு கடித்தவர் தான் பிழைக்க முடியும் என்ற நம்பிக்கையோடிருக்க வழியாக அமையும். தமிழகத்தில் கிராமத்தில் அறியாமை காரணமாகப் பாம்பு கடித்தவரைச் சுற்றி நின்று கத்துவதும், கதறுவதும், ஒப்பாரி வைப்பதும் கடிபட்டவருக்குப் பேராபத்தை விளைவிக்கும் என்பதை மறத்தல் கூடாது.

2. பாம்பை அடித்துக் கொல்லும்போது முதுகில் பலமாக அடித்தால் செத்துவிடும். தலையை நசுக்காமல் செத்த பாம்பை கடிபட்டவரோடு மருத்துவமனைக்கு அனுப்பினுல் சில மருத்து வர்கள் கடித்தது என்ன பாம்பு என்று அறியத் துணையாக இருக்கும். முக்கியமாக பாம்பின் தலைச் செதில்களிலிருந்து விஷமுள்ள பாம்பா இல்லையா என்பதைக் கண்டுபிடிக்க முடியும்.

3. பாம்பு கடித்தவர் வலியால் துடிக்கின்றபோது அவரை அங்கு மிங்கும் ஓட அனுமதிக்காமல் படுக்கையில் கிடத்தி மருத்துவமனைக்குக் கொண்டு செல்ல வேண்டும். இப்படி ஓடுவ தால் விஷம் அதிவேகமாக இரத்தக்குழாய்களில் ஓடி இருத யத்தை அடையும்போது உயிருக்கு ஆபத்து ஏற்படலாம். வலியால் துடிப்பவருக்குத் தூக்கந்தரும் "மார்பிள்" ஊசி போடவோ, வலியைக் குறைக்கச் சாராயம், பிராந்தி, விஸ்கி போன்ற மதுவகைகளைக் கொடுக்கவோ கூடாது.

வலியைக் குறைக்க ஆஸ்ப்ரின் (Asprin) அல்லது பெனடால் (Panadol) அல்லது காம்பவுண்ட் கோடின் (Compouud Codine) ஆகிய வலி கொல்லி மாத்திரைகள் கொடுக்கலாம்.

4. கடிபட்ட இடத்திற்கும் இருதயபாகமான நெஞ்சிற்கும் குறிப்பாகக் கடிபட்ட இடத்திலிருந்து ஆறு அங்குலத்திற்குமேல்' கைக்குட்டை அல்லது ஏதாவது கயிற்றினுல் கட்டுப்போட வேண்டும். ரொம்பவும் இறுக்கமாக இக் கட்டு இருக்கக்கூடாது. இந்தக் கட்டினை 15 நிமிடத்திற்கு ஒரு முறை சிறிது இளக்கி மறுபடியும் கட்டவேண்டும். ரொம்பவும் இறுக்கிக் கட்டு தளர்த்தப்படாமலிருந்தால் ரத்த ஓட்டம் நிரந்தரமாகத் தடைப் பட்டு உறுப்புக்களை இழக்க வேண்டி வரும்.

கடிபட்ட இடம் முன் கையாக இருந்தால் தொங்க விடாமல் கையை மடக்கி ஒரு துணியில் தொட்டிபோல் கட்டி கழுத்தோடு இணைக்க வேண்டும்.

5. கடிபட்ட இடத்தைக் கத்தியால் கீறிவிட்டு இரத்தத் தையும் நஞ்சையும் வெளியேற்றுவது தவறு. இப்படிச் செய்வ தால் நஞ்சு கடிபட்ட இடத்திலேயுள்ள தசைகளில் பரவி நிரந்தரமான புண் ஏற்பட்டால் ஆற நாட்கள் பலவாகும். வெள்ளைத் துணியையோ, பஞ்சையோ தண்ணீரில் நனைத்து கடிவாயைக் கழுவி இரத்தம் வெளிவரச் செய்யவேண்டும். இப்படிக் கழுவ உதவுபவர் கையில் எவ்வித புண்ணோ, காயமோ இருக்கக் கூடாது. சிலருக்குக் கத்தியால் கீறிவிட்டு இரத்தத்தை வாயினுல் உறிஞ்சும் பழக்கமுண்டு. வாயில் எவ்வித புண்ணும்

## பாம்புக் கடிகள்



படம் 1
நஞ்சுள்ள பாம்பு



படம். 2
நஞ்சற்ற பாம்பு



படம் 3
பின் கடைவாய் நச்சுப்பல் பாம்பு விஷத்தன்மை மிகக் குறைவு



நூலாசிரியரும் மருத்துவர் எ. சி. ஹர்ரல் அவர்களும்

இல்லாதவர் இந்த முறையைக் கையாளலாம். ஆனால் இது பாதுகாப்பானதல்ல.

6. சிங்கப்பூர் மலாய்சியாவில் வாழும் கருநாகங்கள் விஷத்தைக் காற்றோடு கலந்து ஊதும்போது கண்ணில் விஷம் பட்டால் கண்ணைக் கசக்காமல் நல்ல தண்ணீரினால் உடனே கழுவ வேண்டும். முடிந்தால் கண்ணைக் கழுவிய பிறகு கண்ணில் தாய்ப்பால் விடுவது நல்லது.

7. எவ்வளவு விரைவாக மருத்துவமனைக்குக் கொண்டு செல்ல முடியுமோ அவ்வளவு நல்லது.

8. நச்சுப் பாம்புகளுக்கு நச்சுப் பற்கள் முன் பக்கத்திலுள்ளன. மற்ற சிறிய பற்கள் நச்சுப் பற்களுக்குப் பின்புறமுள்ளன. பாம்பு நஞ்சுள்ள பாம்பா என்று கண்டுபிடிக்கப் படம் ஒன்றைப் பாருங்கள். கடிவாயில் இரண்டு பெரிய பள்ளமும் அதற்குக் கீழே சிறு சிராய்ப்புக்களும் இருந்தால் நஞ்சுள்ள பாம்பு என்று அறியவும்.

படம் இரண்டில் மேற்சொன்ன இரண்டு ஆழ்ந்த குறியும் சிறு குறிகளும் இல்லாது ஒரே மாதிரியான சிறு பள்ளங்கள் இரு பக்கமும் இருந்தால் விஷமற்ற பாம்பாகும். படம் மூன்றில் முன்புறம் சிறு புள்ளிகளும், பின்புறம் ஆழ்ந்த இரு புள்ளிகளும் இருந்தால் பின் கடைவாய் நச்சுப் பல்லுடைய பாம்புக் கடி என்று கொள்க.

கடிபட்டவருக்கு அதிகவலி, வாயில் நுரை தள்ளுதல் கடிபட்ட இடத்திலிருந்து மற்ற அவயவங்கள் மரத்துப் போதல், இமைகள் மூடுதல், மயக்க மடைதல் முதலியவை நாக வகைகள், கட்டுவிரியன், பவழப்பாம்பு கடித்ததற்கு அறிகுறியாகும்.

விரியன் பாம்பு வகைகள் கடித்தவர்களுக்குக் கடிபட்ட இடம் வீக்கம், தசை கரைந்தும் சிவப்பேறியும் போன கடிவாய், தாளமுடியாத வலி, சில சமயம் மூக்கால் வாயால்கூட இரத்தம் வரலாம், (கடிபட்டு நீண்ட நேரமானால்) தாக வறட்சி ஆகியவைகள் இருக்கும். மேற்கண்டவற்றை மனதில் கொண்டால் பாம்புக் கடியால் துன்புறுபவரை நிச்சயம் காப்பாற்ற முடியும்.

# 18

# பாம்புக் கடிக்குத் தமிழ் வைத்திய முறைகள்

நான் கிராமத்தில் பிறந்து நகரிலே படித்து தமிழகத்திலிருந்து சிங்கப்பூரில் குடியேறி 19ஆண்டுகள் அங்கிருந்து 1970இல் நிரந்தர மாக லண்டனில் குடியேறியவன். இங்கிலாந்து எனது நாடு. இப்பகுதியில் நான் நேரிடையாக பாம்புக் கடிபட்டவரைத் தமிழ் வைத்திய முறைகளினால் காப்பாற்றியதை நேரே காண வில்லை. நான் படித்ததும் கேட்டதும் அறிந்ததுமான விஷயங் களை இந்தப் பகுதியில் தொகுத்துள்ளேன். பாம்புக் கடிக்குத் தமிழகத்தில் எந்த மருந்து விற்கப்படுகிறதென்று நான் விளம் பரம் செய்யத் தயாராக இல்லை.

தமிழறிஞர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் எழுதிய தமிழ் மருந்துகள் என்ற நூலில் பாம்புக் கடிபட்டவரை, உடனே ஒரு வாழை மரத்தையே வெட்டிப் பட்டைகளைத் தரையில் பரப்பிப் படுக்க வைத்து, வாழைப் பட்டையின் சாற்றை வாயில் குடிக்கக் கொடுக்க விஷம் நீங்கும் என்பதை அனுபவ வாயிலாக எழுதியுள்ளார்.

1968இல் நான் தமிழகம் வந்தபோது பலரை தமிழ் வைத்திய முறை பற்றிக் கேட்டதுண்டு.

எனது உறவினர் மணலி பசுபதி அவர்கள் கருந்துளசிச் சாற்றை எடுத்து வாயில் கொடுத்து, தலையில் சிறிது கீறி துள சியை நசுக்கித் தேய்த்தால் நாகப் பாம்பின் விஷம் இறங்கு மென்றார்.

நாகையில் யாந்த்ரீக முறையில் பலவைத்தியம் செய்யும் சுப்பிரமணிய ஐயர் என்பவர் (இவரை நொண்டி ஐயர் என்று

அழைப்பர்) பாம்பு, தேள், நண்டுவாக்களி ஆகிய கடிகள் அனைத்திற்குமே "கோஷ்டம்" என்ற வேரைக் காயவைத்துப் பொடியாக்கித் தண்ணீரில் குழைத்து ஒரு கொட்டைப் பாக்கு அளவு உட்கொண்டால் விஷம் நீங்கும் என்று கூறினர்.

ஒரு சிலர் வேப்பிலையை உபயோகித்து விஷமிறக்குவதாக அறிந்தேன். இது மந்திரத்தின் மூலம் நடப்பதாக அறிந்தேன். 1968க்கு மூன்றாண்டுகளுக்கு முன்பு "நியுஸ் வீக் (News Week) என்ற அமெரிக்க வார சஞ்சிகையில் ஆங்கிலேயர் ஒருவர் எழுதிய கட்டுரை ஒன்றினைப் படித்தேன். பச்சிலைகள் மூலம் எப்படி பாம்புக் கடியால் மாண்டவர் என்று கருதியவர் மீண்டார் என்பதைச் சுவைப்பட எழுதியிருந்தார். இந் நிகழ்ச்சி தமிழகத்தின் வெற்றி மூலம் தமிழகத்தை உயர்த்தியுள்ளது.

உலக மஹாயுத்தத்தின்போது பெங்களூரில் முகாமில் பணி புரிந்த ராணுவ மேஜர் ஒருவரின் மகன் நாகப் பாம்பினால் கடிபட்டார். 12 வயது, அதுவும் ஒரே மகன். 15 மைல் தொலைவில் உள்ள மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லும் நிலையில் கடிபட்டவர் இல்லை. பையனின் கண் இமை மூடி, கழுத்து சாய்ந்து, கை விரல்களில் நீலம் பாய்ந்தது. ராணுவ முகாமிலுள்ள வெள்ளை மருத்துவரோ பையன் காப்பாற்ற முடியாத கட்டத்தை அடைந்து விட்டார் என்று கூறிவிட்டார்.

மேஜரிடம் பணிபுரிந்த கீழ்மட்ட அதிகாரியான (ஹவில்தார்) ஒரு தமிழர் மேஜரிடம் அனுமதி பெற்று ஒரு மந்திரவாதியைக் கொண்டுவரச் சென்றார்.

மந்திரவாதி மேஜர் எதிரே கொண்டு வந்து நிறுத்தப்பட்டார். இடையில் ஒருமுழ வேட்டி. அழுக்கேறிய உடல், பரட்டைத்தலை, குழிவிழுந்த கண்கள், எலும்பு முட்டிய கன்னங்கள். இவன் என்ன செய்ய முடியும் என்று ஹவில்தாரைக் கேட்டார்.

மந்திரவாதி வரும்போதே கையில் வேப்பிலைக்கட்டு கொண்டு வந்தார். பிண நிலையில் இருந்த பையனின் முகத்திற்கு நேரே வேப்பிலையை வீச ஆரம்பித்தார். இடை இடையே 'பூ' 'பூ' என்று காற்றை ஊதினார். மந்திரவாதியின் உடலோ மெல்லிய உடல். கொஞ்சம் அதிகமாக காற்றை ஊதினால் மந்திரவாதியே மூர்ச்சையாகி விடுவார் போன்ற எலும்புச்சட்ட உடல். வாய் வெற்றிலை மென்று கறை படிந்திருந்தது.

இருபது நிமிடம் கழிந்தது. அசையாது கிடந்த பையன் அசையவே இல்லை. மேஜர் தன் மகனை இனி உயிரோடு காண முடியாதென்று தலை கவிழ்ந்து கதறிக்கொண்டிருந்தார்.

மந்திரவாதி வேப்பிலை அடிக்கும் வேலையை நிறுத்திவிட்டு அருகிலுள்ள புதர்ப்பக்கம் சென்றார். சில இலைகளைப் பறித்துத் தன் வாயில் போட்டு மென்றுகொண்டே வந்தார். வாயிலிருந்த மென்ற அந்த இலைகளைக் கடிவாயில் வைத்துக் கட்டினார். மறுபடியும் வேப்பிலை வீச்சு ஆரம்பமானது. 15 நிமிடம் சென்று மாண்டவன் என்று கருதப்பட்ட ஒரே மகன் துயிலிலிருந்து எழுவதைப்போன்று எழுந்து உட்கார்ந்தான். மேஜர் அவர் கண்களை நம்பவே முடியவில்லை. பையனைத் தூக்கி முத்தமிட்டார். ஹவில்தாரின் கையையும் மந்திரவாதியின் கையையும் மாற்றி மாற்றி நன்றி உணர்வோடு குலுக்கினார். ஹவில்தாரையும் மந்திரவாதியையும் அழைத்துத் தன் இருப்பு பேழையைத் திறந்து பல ஆயிரம் ரூபாய்களை அவர் முன் வைத்து அந்தப் பணத்தை ஏற்றுக்கொள்ளுமாறு மந்திரவாதியிடம் கூறுமாறு ஹவில்தாரைப் பணித்தார்.

மந்திரவாதி ஒற்றைக் காசு கூட ஏற்காது தலையசைத்து வீடு திரும்பினார். மேஜர் இப்படியும் ஒரு உயர்ந்த இந்தியமகன் இருப்பதைக் கண்டு அயர்ந்தார்.

உடனே மந்திரவாதி உயிரைக் காப்பாற்றுவது தன் கடமை அதற்காக காசு வாங்கினால் தன் சக்திக்குப் பங்கம் வரும் என்று கூறவே, முடிவில் ஒரு வெள்ளாட்டைக் கொண்டு வந்து அன்பளிப்பாகவும் தன் மகன் நினைவாகவும் மந்திரவாதியிடம் கொடுத்தனுப்பினார்.

கட்டுரையாளர் கடைசியில் குறிப்பிடும்போது மேற்கண்ட நிகழ்ச்சி மேல் நாட்டவர்கள் இந்திய நாட்டில் இணையற்ற இது போன்ற வல்லுனர்கள் உள்ளார்கள் என்பதை உணர ஒரு பெரும் வாய்ப்பென்று குறிப்பிட்டுள்ளார்.

நானும் இந்திய மண்ணிலே பிறந்தவன் என்பதால் எனக்கும் பெருமையல்லவா ?

நல்ல உடல் நலத்துடன் நான் பிரிட்டனில் வாழ்வேனானால் என்னுடைய இரண்டாவது பதிப்பில் இது போன்ற உண்மை நிகழ்ச்சிகளையும் குறிப்பாக பச்சிலை மூலிகைகள் மூலம் ஆதார பூர்வமாக குணப்படுத்தப்பட்ட நிகழ்ச்சிகளையும் துருவி ஆராய மீண்டும் தமிழகம் வருவேன் என்று கூற ஆசைப்படுகிறேன்.

# பாம்புக் கலைத் திறவுகோல்

இந்தத் திறவுகோல் படத்தைத் தயாரித்து உதவியவர் கோலாலம்பூர் (மலேய்சியா) மருந்தக ஆய்வு நிலையத்தில் பணிபுரிபவரும் பாம்பு நூல் வல்லாருமான எனது நண்பர் திரு. லிம் பூலியாட் (Lim booliat). அவருக்கு நாம் மிகவும் கடமைப்பட்டுள்ளோம். இந்தப் படங்களை நான்கு பகுதியாகப் பிரித்துள்ளோம்.

| | |
|---|---|
| 1—2—3—4—5 | பாம்புகளின் தலை மேல் பக்கம் |
| 6—7—8—9 | பாம்புகளின் தலைப் பக்கவாட்டில் |
| 10—11—12 | பாம்புகளின் வயிற்றுச் செதில் களமைப்பு |
| 13—14—15—16—17—18 | பாம்புகளின் வாலமைப்பு |

**ராஜநாகம் (King Cobra)**

1. தலையின் மேல் பக்கம் பட்டைச் செதில்கள் ஒன்பதுடன், இரண்டு செதில்கள் அதிகமாக உள்ளது.

6. மேலுதட்டுச் செதில்களில் பக்க வாட்டிலுள்ள செதில்களில் 3ஆவது செதிலும் நான்காவது செதிலும் கண்ணைத் தொட்டுக்கொண்டிருத்தல்.

10. வயிற்றின் செதில்கள் ஒற்றையாக கடைசிவரை இருத்தல்.

15. வாலின் அடிப்புறச் செதில்கள் பாதி ஒற்றை வரிசை பாதி இரட்டை வரிசை என்பதைக் கவனிக்கவும்.

**விரியன் பாம்புகள் (Vipers)**

**ஆடர் பாம்புகள் (Adders)**

2. தலைச் செதில்கள் மிகச் சிறியவை

10. வயிற்றுச் செதில் ஒற்றை வரிசை

14. வால் செதில்கள் ஒற்றை வரிசை

**குழிவிரியன்கள் (Pit Vipers)**

3. ஒன்பது பட்டைச் செதில்கள் மற்றவை சிறிய செதில்கள்
2. சிலவற்றிற்குச் சிறிய செதில்கள்
10. வயிற்றுச் செதில் ஒற்றை வரிசை
17. வால் இரட்டை வரிசைச் செதில்கள்

**சாதாரண நாகங்கள் (Common Cobras)**

4. தலைச் செதில்கள் ஒன்பது
6. மூன்ருவது நான்காவது செதில்கள் கண்ணைத் தொடுதல்
10. வயிறு ஒற்றை முழுச் செதில்கள்
18. வால் செதில்கள் இரட்டை வரிசை

**தண்ணீர்ப் பாம்புகள் (Freshwater Snakes)**
**கடற் பாம்புகள் (Sea Snakes)**

5. தலைச் செதில்கள் பட்டையும், சிறியதும். மூக்குத் துவாரம் தலையின் மேற்புறம்
12. வயிறு பொடிச் செதில்கள்

(விஷமுள்ளவையும் இல்லாமையாகவும் இருக்கலாம்)

13. வால் தட்டையாக இருக்கும். இவைகள் கடற் பாம்புகளில் விஷமுள்ளவை

சாதாரண நீர்ப் பாம்புகளுக்கும் ஒரு சில கடற்பாம்புகளுக்கும் வால் கூர்மையாகவே இருக்கும்.

**பவழப் பாம்புகள் (Coral Snakes)**

4. தலைப்பட்டைச் செதில்கள் ஒன்பது
7. 3 ஆம் 4 ஆம் செதில்கள் கண்ணைத் தொடுதல்
10. வயிறு ஒற்றை முழுச்செதில்கள்
17. வால் செதில்கள் இரட்டை

இந்தப் பாம்புத் திறவுகோலை விலங்குநூல் (**Zoology**) மாணவர்கள் - மருத்துவர்கள்-சாரணர்-படைவீரர் ஆகியவர்களுக்குக் குறிப்பாகவும், மக்களுக்குப் பொதுவாகவும் பயன்படும் முறையில் தயாரித்துள்ளேன். பயன்படுத்திப் பயனடைக.


HEAD (TOP)
தலை மேற்புறம்
1
2
3
4
5


HEAD (SIDE)
தலை பக்கவாட்டில்
6
7
8
9


BELLY
வயிறு
10
11
12


TAIL
வால்
13
14
15
16
17
18

# ஆய்வின் வெற்றி

1970ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள்வரை நான் பெரும்பகுதி மலேய்சியா சிங்கப்பூரில்தான் பாம்புகளைப்பற்றி என்னுடைய ஆய்வுகளை நடத்தி வந்தேன். என்னுடைய வீட்டில் பாடம் செய்த பாம்புகளையும் உயிர்ப் பாம்புகளையும் வைத்திருந்தேன்.

துவக்கத்தில் எனக்குப் பலவித எதிர்ப்பு வந்தது என்பதை முன்பகுதிகளில் குறிப்பிட்டுள்ளேன். குறிப்பாக என்னுடைய முதல் மகள் மலர்விழிக்கு 1963 ஆம் ஆண்டு 5 வயது. இதனாலேயே எனது துணைவி தன்னுடைய எதிர்ப்பைத் தெரிவிக்கத் தயங்கவில்லை. கருநாகங்களை எனது வீட்டில் வளர்த்ததே இதற்குக் காரணம். இது தவிர என்னுடைய வீட்டிற்கு வருபவர்கள் அவர்களின் பயம் காரணமாக ''பாம்புகள் சனியன்கள் அல்லவா? இதனால் வீடே விடியாது'' என்று தனிப்பட்ட முறையில் எனக்குத் தூபம் போட ஆரம்பித்தார்கள் என் மனைவியிடம்.

நான் ஒரு பிடிவாதக்காரன் என்பதை விளக்கியுள்ளேன்.

**போற்றுபவர் போற்றட்டும்; புழுதி வாரித்**
**தூற்றுபவர் தூற்றட்டும்; தொடர்ந்து செல்வேன்**
**ஏற்றதொரு கருத்தை எனதுள்ளம் என்றால்**
**எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன்; அஞ்சேன் !**

என்று கவிஞர் கண்ணதாசன் பாடிய பாடல்தான் என் நினைவுக்கு வரும்.

என்னுடைய இரண்டாம் மகள் அட்டைப் படத்திலுள்ள அருண் மொழி 1963 செப்டம்பரில் பிறந்தாள்.

என்னுடைய பெரிய மகள் மலர் பாம்பையே தொடுவதில்லை. என்னுடைய மனைவி சிங்கப்பூர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் விரிவுரையாற்றிவிட்டு வீடு திரும்ப நேரமாகும்.

குழந்தைக்கு ஆறு மாதத்திலேயே என்னுடைய துணை விக்குத் தெரியாமலேயே பாம்புகளைக் குறிப்பாக மலைப்பாம்புக் குட்டிகளை குறைந்தது 6 அடி நீளமுள்ளவைகளைக் கொடுத்து விளையாட்டுக் காட்ட ஆரம்பித்தேன். இந்த மலைப்பாம்புக் குட்டிகள் எனது குழந்தைக்கு எவ்விதத் தொல்லையுமில்லாமல் அருண்மொழியோடு தூங்க ஆரம்பித்தன.

ஒருநாள்! என்னுடைய மனைவி எதிர்பாராமல் இரண்டு மணி நேரம் முன்னதாகவே வீடுவந்தபோது எனது கைக்குழந்தை கையில் பாம்பைப் பிடித்துக்கொண்டு மழலை மொழியில் குரல் எழுப்பிக் கொண்டிருந்ததைக் கண்டுவிட்டாள். நான் பின்புறம் தண்ணீர் எடுக்கச் சென்றிருந்தேன்.

'ஐயையோ!' என்ற சத்தம் வீட்டை இரண்டாக்கியது. அக்கம்பக்கத்துக்காரர்கள் ஓடி வந்தனர்.

இதற்குமுன் பாம்போடு என் குழந்தை விளையாடுவதைப் பார்க்காத எனது துணைவி வீட்டில் உள்ள ஏதோ ஒரு பாம்பு தப்பித்து என் குழந்தையைத் தாக்கிக் கொண்டிருப்பதாக எண்ணியே அலறினாள். நான் பாம்பை மெதுவாக எனது மகள் கையிலிருந்து வாங்கி என் மனைவியிடம் அது விஷமற்ற பாம்பு என்பதைக் கூறி பல மணிநேரம் சமாதானம் கூறினேன்.

மாதங்கள் ஆண்டுகளாயின. பத்திரிகையில் கட்டுரைகள் ஒளிக்காட்சி இவைகள்மூலம் பெரும் செல்வாக்குப் பெருகவே எனது துணைவி எனக்கு முழு ஒத்துழைப்பைத் தர ஆரம்பித்துக் கடைசிவரை எனக்குத் துணை நிற்கின்றாள்.

நான் வேலை செய்த இடமும் விமானத்தளமானதால் எனக்கு ஒத்துழைப்புக் கிடைத்தது. 1969ஆம் ஆண்டு ஒருமுறை தமிழகம் வந்து பெங்களூர், சென்னை, தமிழகத்திலுள்ள மந்திரவாதிகள் முதலியவர்களைச் சந்தித்துத் தமிழகத்தின் பாம்புகளைப் பற்றி ஓரளவு அறிந்தேன்.

1973 இல் நான் குடியேறியுள்ள பிரிட்டனில் கிராய்டன் (Croydon) என்ற பெருநகரில் முதல் ஆசிய (குறிப்பாக தமிழ்) சமூகச் சேவையாளனாக (Social worker) பதவி ஏற்றேன். இந்த வேலைக்கு இரண்டாண்டுகள் கல்லூரியொன்றில் முழு நேரப் படிப்புப் படித்து டிப்ளோமா (Diploma) பெற்றிருக்க வேண்டும். பாம்பாராய்ச்சி மட்டுமல்லாது இந்தியக் கலைகள்



சிங்கப்பூர் மருத்துவமனையில் நூலாசிரியர் சொற்பொழிவு

குறிப்பாக நடனங்கள், நாடகம், மக்கள் தொடர்பு ஆகியவைகளில் நான் திறமை பெற்றிருந்ததாலேயே எனக்கு அப்பதவி வழங்கப்பட்டது.

1964 இல் பிரிட்டிஷ் அரசு கிராய்டன் பகுதி நல அமைப்பில் என்னைக் கௌரவ உறுப்பினராக நியமித்துப் பெருமைப்படுத்தியது. இதற்கு மூலகாரணம் பாம்பு ஆராய்ச்சியும் மக்கள் தொடர்புமாகும்.

'மூன்றும் உலக ஆய்வு' என்ற தலைப்பில் பல பள்ளிகளில் பாம்புகளைப் பற்றிச் சொற்பொழிவு ஆற்றினேன்.

1976 சூன் திங்கள் கிராய்டன் இனத் தொடர்புக் கழகச் சார்பில் இந்திய நாட்டிலுள்ள ராஜப் பிரதிநிதிகளோடு பேச்சுவார்த்தை நடத்தவும் சென்னை அரசுடன் பேச்சுவார்த்தை நடத்தவும் இந்தியாவுக்கு வந்தேன். 15-6-76 அன்று மாலை சென்னைப் பாம்புப் பூங்காவையும் அது நிர்வகிக்கப்படும் முறைகளையும் கண்டு வியப்பில் ஆழ்ந்தேன்.

பாம்புப் பூங்காவின் மேலாளர் திரு பி. பி. சேகர் அவர்களும் அவர்களோடு பணிபுரியும் உதவியாளர்களும் மிகவும் திறமையாகப் பணி புரிவதைக் கண்டு வியந்தேன். இந்தியப் பாம்புகள் பலவற்றைப்பற்றி அறியவும் அவைகளைப் படம் எடுக்கவும் அவர்கள் உதவினார்கள். என்னுடைய வருகையின்போது நெட்டிவேலை நிபுணர் திரு ஜெகன் அவர்கள் எனது சுற்றுப்பயண நிகழ்ச்சிகளை முறைப்படி தயாரித்து உதவினார். சென்னையில் உள்ள அசோகா ஹோட்டலில் உட்கார்ந்து இரவு பகலாக நானும் ஜெகனும் நூல் வடிவம் பற்றி விவாதித்து ஒரு முடிவுக்கு வந்தோம்,

நான் இன்று ஒரு நல்ல பதவியில் இருப்பதற்கு மூலகாரணமாக இருந்ததே எனது பாம்பாராய்ச்சிதான்.

சென்னைப் பாம்புப் பூங்காவைப் பார்த்த பிறகு மலேய்சியப் பாம்புகளையும் இந்தியப் பாம்புகளையும் ஒப்பிட்டு எழுத முடிவு செய்து நூலை உருவாக்கினேன்.

